**பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம்**
**நஹ்மதுஹு வநுசல்லி அலா ரசூலிஹில் கரீம்**

# இமாமே அஹ்லே சுன்னத்

# அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹு அன்ஹு

**14ம் நூற்றாண்டின் முஜத்தித் - வாழ்க்கை வரலாறு**

**நன்றி...நன்றி...நன்றி!**
இந்தப் புத்தகம் வெளியிடுவதற்காக தம்முடைய பொருளுதவியாலும், உடலுழைப்பாலும் உதவிய அனைத்து நல்லோர்களுக்கும் அல்லாஹுதஆலா ஈருலக வெற்றியைக் கொடுத்து கியாமத் நாள் வரை வரும், இவர்களின் வாரிசுகளை ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமை நேசிக்கும் அஹ்லே சுன்னத் வல் ஜமா அத்தில் நிலைத்திடச் செய்வானாக.- ஆமின்.

**தொகுப்பு**
**முஹம்மத் ஜக்கரிய்யா அல்காதிரியில் ரஜ்வியில் ஹஷ்மதி**
Mobile :98943 26839
E mail: mohamedzakriya_razvi@rediffmail.com

**PUBLISHED BY:**

**SAHEB DARGAH PUBLISHERS,**
**74/176-A. FIRST FLOOR,**
**GANDIJI ROAD,**
**(OPP) ERATTAI MASTAN DARGAH,**
**THANJAVUR – 613001.**
**E-Mail: dargah_tnj@yahoo.com**
**www.dargahtnj.blogspot.com**

# நூல் விபரம்

நூலின் பெயர் : இமாமே அஹ்லே சுன்னத் -
அஹமத் ரஜாகான் ரஜியல்லாஹு" அன்ஹு"
14ம் நூற்றாண்டின் முஜத்தித் -
வாழ்க்கை வரலாறு

மொழி : தமிழ்

தொகுப்பு : முஹம்மத் ஜக்கரிய்யா அல்காதிரியில்
ரஜ்வியில் ஹஷ்மதி

நூலின் உரிமை : வெளியீட்டாளருக்கே

வெளியீடு : **SAHEB DARGAH PUBLISHERS,**
74/176, A. FIRST FLOOR,
GANDIJI ROAD,
(OPP) ERATTAI MASTAN DARGAH,
THANJAVUR - 613 001.
E-Mail:dargah_tnj@yahoo.com
www.dargahtnj.blogspot.com

பதிப்பு ஆண்டு : முதற்பதிப்பு ஜனவரி 2010

மொத்த பதிப்பு : 2000

அச்சிட்டோர் : மாணிக்கம் அச்சகம்,
தஞ்சாவூர் - 1. போன் : 237953.

விலை : ரூ 35/-

# மதிப்புரை

இன்று வட இந்தியாவின் அஹ்லெ சுன்னத் வல் ஜமாஅத் கொள்கை கோட்டையின் மாபெரும் முஜத்தித், ஷரீஅத்தில் கரை கண்ட மேதை, அமலிய்யாத் என்னும் ஓதிப்பார்த்தலில் தன்னிகரற்ற சேவையாளர், தரீகத்தில் மேன்மையான இடத்தைப் பெற்றுத் திகழ்ந்தவர், ஃபத்வா வழங்குதலில் சாதனையை ஏற்படுத்தியவர், முனாஜரா – தர்க்கக் கலை, ஃபல்ச.ஃபாத்து - ஞானம், என்ற கல்வி கேள்வி ஞானங்களில் தன்னிகரற்று திகழ்ந்தவர். குர்ஆனின் உருது மொழிப்பெயர்ப்பு பிரச்சனை ஏற்பட்டபோது, சுன்னத் ஜமாஅத் அகாயிதுக்கு சற்றும் பிறழாமல் மொழிப்பெயர்த்த அரபி, உருது, பார்ஸி மொழிகளில் பாண்டித்தியம் பெற்றவர்.

கண்மணி நாயகம் அஹ்மதே முஸ்தபா முஹம்மதே முஸ்தபா நபியே கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் மீது சர்வசதா காலமும் இஷ்க் என்னும் காதலில் மூழ்கி நாதே ஷரீ.ஃப் என்னும் புகழ்மாலைகளை உருது, அரபி, பாரசீக மொழிகளில் உலகமுழுக்க பாடப்படும் இனிமை கீதங்களாக ஒலிக்க வைத்தவர். அவர் இயற்றிய ‘‘முஸ்தபா ஜானே ரஹ்மத்பே லாக்கோ ஸலாம்’’ என்ற சலாம் பைத்து இஸ்லாமிய இல்லங்களில் மொழி மாச்சரியங்களை கடந்து ஒலிப்பது கண்கூடு.

அஹ்லே பைத் நபிக்கிளையார்கள் மீது அவர் வைத்திருந்த மரியாதை உள்ளப்பூர்வமாக பின்பற்றத் தக்கது. இவர்கள் எழுதிய நூட்கள், மௌலூது, மீலாது, நாத்தே ஷரீ.ஃப் என்னும் பாராயணங்களை, பல பல்கலைக் கழகங்கள் M.A., M.phil., P.h.d., தீஸிஸ் ஆய்வுகளில் கட்டுரை கட்டுரைகளாக வெளிவந்த வண்ணம் உள்ளன. அவர்கள் ஆலா ஹஜ்ரத் என அன்போடு உலகமெங்கும் அடைமொழியோடு அழைக்கப்படும் அல்லாமா அஹ்மத் ரஜா கான் ஃபாஜிலே பரேல்வி ஆவார்கள். இவர்களின் சில்சிலாவில் வந்த கலீ.ஃபாக்கள் உலகமெங்கும் பரவி சிறந்த சேவையாற்றி வருகிறார்கள்.

வஹ்ஹாபி என்ற குதர்க்க குழப்ப கூட்டம் பிரிட்டீஷ் ஏகாதிபத்தியத்தின் துணையோடு யூத சூழ்ச்சியோடு, சவூதி, நஜ்தி, தேவ்பந்தி, தப்லீகி, தவ்ஹீதுவாதி, ஸல.ஃபி, சக்டாலவி. நேச்சரி, ரா.ஃப்ஜி, ஷியா என்ற பற்பல பெயர்கள் தாங்கி அஹ்லே சுன்னத் ஜமாஅத் பாமர முஸ்லிம்களை குழப்ப நினைத்த போது அவர்கள் யார்? எவர்? என்று ஏரெடுத்தும் பாராமல், எவ்வித

சஞ்சலத்திற்கோ, சமரசத்திற்கோ ஆட்படாமல் அல்லாஹ், அவனது ரஸுல், அவ்லியாக்கள், ஷரீஅத் சட்டம், தரீகத்தின் தாத்பரியம், அஹ்லே சுன்னத் வல் ஜமாஅத்தின் அகாயிது கொள்கைகளை நிலை நிறுத்தி ஃபத்வா வழங்கினார்கள்.

இப்படிப்பட்ட மேதையான சங்கைக்கும், கண்ணியத்திற்கும், போற்றுதலுக்குமுரிய ஆலா ஹஜ்ரத் அஜீமுல் பரக்கத் அவர்களைப் பற்றி தமிழகத்தில் தேவ்பந்திய வஹ்ஹாபிய அகீதா கொள்கை கொண்ட ஜமாஅத்துக்கே பெரிய உலமாக்கள் என்போர் தவறான வரலாற்றைக்கூறி களங்கம் கற்பிக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ள இத்தருணத்தில் பேராசிரியர் ஆலி ஜனாப் முஹம்மத் ஜகரிய்யா ரஜ்வி அவர்கள் ஆலா ஹஜ்ரத் அவர்களின் வரலாற்றுச் சுருக்கத்தை தமிழ் கூறும் நல்லுலகிற்கு வழங்கியிருப்பது காலத்தே சிறந்த சேவையாகும். மிகவும் பாராட்டுக்குரியதாகும்

எல்லாம் வல்ல அல்லாஹ், இந்நூலை தொகுத்தளித்த பேராசிரியர் முஹம்மத் ஜகரிய்யா ரஜ்வி அவர்களையும், படிக்கும் வாசகர்களையும் சுன்னத் வல் ஜமாஅத் பாதையில் வழி நடத்தி இம்மையிலும், மறுமையிலும் பெரும் பாக்கியம் பெற்று வெற்றியாளர் கூட்டத்தில் சேர்க்க வேண்டுமாய் அல்லாஹ்வின் ஹபீபும் மஹ்பூபுமான கண்மணி நபிகள் நாயகத்தின் பொருட்டாலும், வலிமார்களின் வஸீலாவாலும், குறிப்பாக ஆலா ஹஜ்ரத் அஜீமுல் பரக்கத்தின் துஆவையும் பணிந்து வேண்டுகின்றோம்.

என்றும் பணிவுடன்
தாழ்மையுள்ள,
**ஸையத் ஷாஹ் அப்துர்ரஸுல் சக்காப்**
தாஜீம் தரக் காதிரி ஷுத்தாரி
(எ) சையத் V.N.சக்காப்
28.12.2009

# வாழ்த்துரை

ஹா.்.பிஸ், மௌலவி, ஹாஜி
M.K.முஹம்மத் காஸிம் மஹ்ளரி
கலீ.்.பா, தரீகத்துல் ஹல்லாஜியா
செயர் குழு உறுப்பினர்: சுன்னத் வல் ஜமாஅத் உலமா சபை.
தமிழ் மாநிலம்
தலைவர்: மஜ்லிசுல் உலமா. நாகூர் ஷரீ.்.ப்
இமாம்: ஏழு லெப்பை ஜாமிஆ மஸ்ஜித், நாகூர் ஷரீ.்.ப்

அன்பு வாசகர்களே! அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹி பரகாத்தஹு...... உ.பி. மாநிலம் பரேலியில் அடக்கமாகியுள்ள அடக்கத்தின் திருஉரு, சற்குரு அ.்.லா ஹஜ்ரத், அளீமுல் பரக்கத், ஹாதியெ மில்லத், அல்முஜத்தித், அஷ்ஷைகு இமா அஹ்மத் ரிளாகான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் சரித்திரச் சுருக்கம் - திருச்சி மாநகரைச் சார்ந்த மதிப்பிற்குரிய சகோதரர் பேராசிரியர் முஹம்மத் ஜக்கரிய்யா அவர்களால் தொகுக்கப்பட்டு தமிழ்கூறும் நல்லுள்ளங்களுக்கு கிடைத்திருப்பது எல்லாம் வல்ல அல்லாஹ்வின் வரப்பிரசாதமாகும். ஏனெனில் அ.்.லா ஹஜ்ரத் அவர்கள் வஹ்ஹாபிகள், காதியானிகள், ஷியாக்கள் போன்ற சுன்னத்வல் ஜமாஅத்திற்கு எதிரான இயக்கங்களை இந்திய மக்களுக்கு ஆதாரங்களுடன் அடையாளங்காட்டினார்கள்.

குறிப்பாக அஷ்ரப் அலீ தானவீ, ரஷீத் அஹ்மத் கங்கோஹி போன்ற வழிகெட்டவர்களை இந்திய மக்களுக்கு தோலுரித்துக் காட்டிய அஞ்சா நெஞ்சனாகவும் வஹ்ஹாபிகளுக்கு எதிராக சிம்ம சொப்பனமாகவும் விளங்கினார்.

சமுதாயத்தை துண்டாக்கிய சாக்கடைகள் அஷ்ரப் அலீதானவீ, ரஷீத் அஹ்மத் கங்கோஹி, தப்(பு)லீக் இயக்கத் தலைவன் இல்யாஸ் காந்தலவீ போன்றோரின் கப்ருகள் இன்று கேட்பாரற்று – மதிப்பற்று கிடக்கும் நிலையில் அவர்களின் தீயக்கொள்கைகளை தீர்த்துக்கட்ட குரல் கொடுத்த கோமான் அ.்.லா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின்

மாண்பார்ந்த மண்ணறை 90 ஆண்டுகளுக்கு பின்னரும், மக்கள் மதிக்கும் மாண்புற்ற தர்காவாக பரேலி ஷரீஃபில் புதுப் பொலிவுடன் பரிணமிப்பது அவர்களின் சீரிய சேவையை இறைவன் ஏற்றுக் கொண்டதற்கு சான்று எனில் அது மிகையன்று. கடந்த 29.09.2009ல் நான் பரேலி சென்று அஃலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் கப்ரை ஜியாரத் செய்தபோது இதை நேரில் புரிந்து கொண்டேன். அல்ஹம்து லில்லாஹ்.

கி.பி. 1856 ம் ஆண்டு பிறந்து, கி.பி. 1921 வெள்ளிக்கிழமை நண்பகலில் மறைந்த மாமேதை, அஃலா ஹஜ்ரத் அஹ்மத் ரிளாகான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை பரேலியில் பொதுமக்கள் படே ஹஜ்ரத் ( பெரிய ஹஜ்ரத்) என்று மரியாதையாக அழைக்கிறார்கள். அஃலா ஹஜ்ரத் அவர்களின் பலவேறு கராமத்துகளில் ஒன்றாவது “ ஒரே நேரத்தில் இரண்டு கைகளாலும் இரண்டு எழுதுகோல்களால் இரண்டு கருத்துக்களை எழுதுவார்கள். இரண்டு கையெழுத்துகளும் பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கும்.” மாபெரும் பேரறிஞர் அஃலா ஹஜ்ரத் அவர்களின் சரித்திரத்தை இறைபொருத்தம் நாடி சொல்ல வந்த பேராசிரியர் G. முஹம்மத் ஜக்கரிய்யா அவர்களின் சேவையை இறைவன் ஏற்றுக்கொள்வானாக!

ஆமீன் யா ரப்பல் ஆலமீன்!

**நாகூர் ஷரீஃப்** **இவண்,**
**04.11.09** **முஹம்மத் காஸிம்**

# என்னுரை

தனக்குதானே ஆதாரமாய் பிரபஞ்சம் அனைத்திற்கும் மூலமாய் சுத்த சதோதயப் பொருளாய் விளங்கும் அகண்ட பரி பூரணமாகிய அல்லாஹ் என்னும் பரம்பொருளுக்கே அனைத்துப் புகழும் அர்ப்பணமாவதாக. அடுத்து அப்பரம்பொருளின் இரட்சகப் பொருளாய் முதன்முதலில் தோற்றுவிக்கப்பட்ட அதன் ஜோதியான ஹகீகத்தே அஹ்மதியும், அதனுடைய இறுதி வெளிப்பாடாகிய மனிதத் தோற்றத்தில் அமைந்த முஹம்மத் முஸ்த.்.பா அஹ்மதுல் முஜ்தபா, அகிலங்களின் இரட்சகர், மனித குலத்தின் நாயகர், மண்பதை போற்றும் மாண்பாளார், மக்கா எனும் திருநகரில் பிறந்து மதீனா எனும் அருள்நகரில் மறைந்து வாழும் ஸல்லல்லாஹு தஆலா அலைஹிவஸல்லம் அவர்களின் மீதும், அவர்களின் ஜோதியை தமக்குள் அமானிதமாகத் தாங்கி இப்பூமிக்கு வருகைத் தந்து வழிநடத்திச் சென்ற அனைத்து இறைத்தூதர்கள் மீதும், அவர்களின் கிளைஞர்கள், தோழர்கள் போன்றோரின் மீதும், இறைநேசர்கள் மீதும், அவர்களை தங்களின் முன்மாதிரியாகக் கொண்ட அனைவர் மீதும், அவர்களை ஏற்று விசுவாசித்தவர் மீதும் அப்பரம்பொருளின் சாந்தியும் அமைதியும் நல்லருளும் நல்லுதவியும் சதாகாலமும் சுரந்துப் பொழிவதாக. - ஆமீன்.

இச்சிறியோனின் சிறிய முயற்சியான **“இமாமே அஹ்லே சுன்னத் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹு அன்ஹு – 14ஆம் நூற்றாண்டின் முஜத்தித் வாழ்க்கை வரலாறு”** எனும் இப்புத்தகத்தை எனது ஆன்மீக குருவான ஹஜ்ரத் அல்லாமா மவ்லானா முஹம்மத் இத்ரீஸ் பின் ஷேர் ரஜா கான் கிப்லா அவர்களுக்கும், என்னை வழிநடத்தி வரும் இறைநேசர்களுக்கும் (அவ்லியா அல்லாஹ்) சமர்ப்பணம் செய்கின்றேன்.

இப்புத்தகத்தில் ஏதேனும் பிழைகள் இருந்தால் அதற்கு முழுக்காரணம் நானாவேன். வாசகர்கள் இப்பிழைகளை மன்னித்து இச்சிறியோனின் பெற்றோர்களுக்காக அல்லாஹ், ரசூலிடம் துவா செய்யக் கேட்டுக்கொள்கின்றேன்.

**இப்படிக்கு,**

**தாதா நத்ஹர் வலியின் அடிமை-**

**முஹம்மத் ஜக்கரியா அல்காதிரியில்**

**ரஜ்வியில் ஹஷ்மதி.**

# பொருளடக்கம்

**தலைப்பு** **பக்கம்**

| தலைப்பு | பக்கம் |
|---|---|



## ஆசிர்வதிக்கப்பட்ட குணநலன்கள்

## தலைப்பு பக்கம்

**கராமத்துகள்**

# ஆலா ஹஜ்ரத் ரஜியல்லாஹுதஆலா அன்ஹு ஓர் அறிமுகம்

பெயர் : முஹம்மத் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹுதஆலா அன்ஹு

பிரபலமான பெயர் : ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி

பிறந்த இடம் : ஜசோலி, பரேல்வி ஷரீஃப், உ. பி. இந்தியா.

பிறந்த தேதி : திங்கட் கிழமை, 10 ம் ஷவ்வால் ஹிஜ்ரி 1272 (14th June 1856)

உலக வாழ்க்கையில் மறைந்த தேதி : வெள்ளிக்கிழமை, பாங்கு நேரம் சபர் 25 ம் நாள், ஹிஜ்ரி 1340 (28th October 1921)

ஷைகுமாரின் பெயர் : இமாமுல் அஸ்பியா, ஷா ஆலே ரசூல் மஹ்ரரா ரஜியல்லாஹுஅன்ஹு

தரீகத் : முக்கியமாக காதிரி சில்சிலா, இருப்பினும் எல்லா தரீகத்திலும் அனுமதி பெற்றார்.

## தந்தையின் கனவு

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் தந்தை மவ்லானா நகி அலிகான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஓர் உன்னதமான கனவைக் காண்கின்றார். அதை தன்னுடைய தந்தை ரஜா அலி கான் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களிடம் விளக்கம் கேட்டார்கள். அதற்கு ரஜா அலி கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ‘‘நீ ஒரு குழந்தைக்கு தகப்பனாவாய், அக்குழந்தை வளர வளர

ஞானத்திலும், ஆன்மீகத்திலும் உயர்ந்த இடத்தை வகிப்பான். அவனுடைய பெயர்,புகழ் கிழக்கிலிருந்து மேற்கு வரை உயர்ந்து பரந்து விரியும்.'' என்று சுபச் செய்தியை கூறினார்கள்.

## இமாம் அஹமத் ரஜா ரஜியல்லாஹூ அன்ஹூ அவர்களின் ஆரம்பநிலைக் கல்வி

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அவர்களின்(பிஸ்மில்லா கானி) ஆரம்பநிலைக் கல்வியில் நடந்த சுவையான சம்பவம் இது. ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் மரியாதைக்குரிய ஆசிரியர் தஸ்மியாவை சொல்லிக் கொடுத்தார். பிறகு அலிப், பே, தே எனச் சொல்லச் சொல்ல ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் திரும்பச் சொன்னார்கள். ''லாம்அலிப்'' என்று வந்ததும் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி மௌனமாகி விட்டார்கள். ஆசிரியர் திரும்பத் திரும்ப சொல்லியும் அமைதியாகவே இருந்தார்கள். ஹஜ்ரத் அல்லாமா ரஜா கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை நோக்கி ''மகனே உன் ஆசிரியர் சொல்வதை கவனித்து திரும்பச் சொல்'' எனக் கூறினார்கள்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் மௌனத்தின் காரணத்தை அறிந்துக் கொண்டார் அல்லாமா ரஜா கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி. அதுயாதெனில், முதல் பாடம் கற்பிக்கப்படுவது ஓரெழுத்துக்களைப் பற்றி, ஆனால் ''லாம்அலிப்'' ஈரெழுத்து போல இருப்பது பற்றி ஆகும். ஹஜ்ரத் அல்லாமா ரஸா கான் ரஹமதுல்லாஹி அலைஹி தெரிந்திருந்தார்கள், இந்த தயக்கத்தை (வினாவை) தெளிவுபடுத்துவது கடினமானதொன்று, இருப்பினும் கூறலானார்கள். ''மகனே! நீங்கள் நினைப்பது உண்மையான கூற்றுதான் இருப்பினும் முன்னதாக நீங்கள் ஓதிய ''அலிப்'' உண்மையில் ஒரு ''ஹம்சா'' ஆகும். இப்பொழுது நீங்கள் ஓதுவதே அலிப். அலிப் எப்பொழுதுமே ஒரு ''சாகின்'' ஆகும், ஆனால் அகரவரிசைப்படி (Alphabetical order) ஒருவர் ''சாகினை'' ஆரம்பம் செய்யமுடியாது. அதனால்தான் அகரவரிசையில் ''அலிப்'' க்கு முன்னால் ''லாம்'' வருகிறது.

இதை கூர்மையாக கவனித்த ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி "நீங்கள் சொல்வது போல் இருந்தால் ஏன் வேறு எழுத்துகள் வந்து "அலிப்" முன் சேரக்கூடாது. "லாம்" மட்டும் சேருவதற்கு காரணம் என்ன? என்று வினவினார்கள். இதைக் கேட்ட ஹஜ்ரத் அல்லாமா ரஸா கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மெய்சிலிர்த்து சந்தோஷத்தின் உச்சத்தில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களைக் கட்டிப்பிடித்துக் கொண்டு அல்லாஹ்விடம் அவர்களுக்காக துவா செய்தார்கள். பின் விடையை பின்வருமாறு கூறினார்.

பார்ப்பதற்கு இரண்டு எழுத்துக்களும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். இரண்டுமே வெற்று (Empty) ஆகும். இரண்டுமே சேர்ந்து எழுதினால் கூட பார்ப்பதற்கு ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். அதனுடைய தரத்தில் (Quality) வரும் பொழுது "லாம்" என்பது "அலிப்" க்கு இதயமாகவும், "அலிப்" என்பது "லாம்" க்கு இதயமாகவும் மாறும்.

இந்த தருணத்தில் உண்மையில் நடந்தது என்னவென்றால் ஹஜ்ரத் அல்லாமா ரஜா கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள், ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுக்கு அறிவின் வாசலையும், ஆன்மீக உள்ளுணர்வுகளையும் திறந்து வைத்தார்கள்.

## சிறுவயதில் தக்வா (பயபக்தி)

தன் மீது நோன்பு கடமையில்லாத வயதில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி நோன்பு நோற்க ஆசைப்பட்டு நோன்பு வைத்தார்கள். அந்த ரம்ஜான் மாதம் மிகுந்த வெயில் காலமாய் இருந்தது. ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுடைய தந்தை மவ்லானா நகி அலிகான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி வெயிலின் உஷ்ணத்தை உணர்ந்தவர்களாய் சிறிது உணவு வகைகளை எடுத்துக் கொண்டு, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை அழைத்துக்கொண்டு ஒரு அறைக்குள் சென்று கதவை தாழிட்டார்கள். தன் மகனை சாப்பிடவும் என்று கூறி,இங்கு யாரும் உங்களை பார்க்கமாட்டார்கள், மேலும்

குழந்தைகள் இப்படித்தான் நோன்பை வைப்பார்கள் என்றார். அதற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி "யாருடைய கட்டளைக்காக நான் நோன்பு வைத்திருக்கின்றேனோ அவன் என்னைப் பார்த்தவனாக உள்ளான்" என்றார். இதனை கேட்டதும் அவருடைய தந்தையின் கண்களில் கண்ணீர் வந்துவிட்டது.

ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி 6 வயதில் தன்னுடைய முதல் மார்க்க சொற்பொழிவை ரபியுல்அவ்வல் மாதத்தில், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிறப்பைப் பற்றி தொடங்கினார்கள். சுமார் 2 மணிநேரம் நபிகளின் மௌலூது தலைப்பில் சொற்பொழிவை கேட்டு மக்கள் மெய்மறந்தனர். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி சொற்பொழிவு நிகழ்த்திய விதம் அனைத்து மக்களையும் உலமாக்களையும் வெகுவாக கவர்ந்தது.

## கல்விப் பயிற்சி

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் திருக்குரானைத் தன்னுடைய 4 வயதில் ஓதி முடித்தார். அல்லாஹுவுடைய அரும்பெரும் ஞான ஆற்றலால் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தன்னுடைய இஸ்லாமியப் படிப்பை 13 வருடங்கள்,10 மாதங்கள், 5 நாட்களில் முடித்தார்கள். அப்பொழுது வருடம் ஹிஜ்ரி 1286 ஆகும். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் வயதும் 13 வருடம், 10 மாதம், 5 நாட்கள் ஆகும்.

"அல் ஜா சதூர் ரஸ்வியா" என்னும் நூலில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகிறார்கள், "அந்த வயதில் தொழுகை என் மீது கட்டாயமாக இருந்தது, நானும் ஷரிஅத் சட்டம் பேணுவதில் மிக ஆர்வமாக இருந்தேன்."

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் அடிப்படைக்கல்வியை தம் தந்தையிடத்தும் தனது நடுநிலைக்கல்வியை ஜனாப் மிர்சா குலாம் காதிர் பேக் அவர்களிடத்தில் கற்றார். இவரிடம் தான் மீசான் முன்ஷஅப் என்ற

புத்தகத்தையும் பயின்றார். ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி வேறு பலரிடத்திலும் கல்வி ஞானத்தை பயின்றாா. அவற்றில் சில முக்கியமானவர்கள்...

1. ஹஜ்ரத் மவ்லானா அப்துல்அலி ராம்பூரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி

2. ஷேக்கே கபீர், ஹஜ்ரத் அல்லாமா சையத் ஷா அபுல் ஹசன் அஹமத் நூரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி

3. ஷேக்கே தாரிக்கா, ஹஜ்ரத் அல்லாமா சையத் ஷாஆலே ரசூல் மஹ்ரரவி ரஜியல்லாஹு அன்ஹு

4. ஷேக் அஹமத் பின் ஜைனி தஹ்லான் மக்கீ ரஜியல்லாஹு அன்ஹு

5. ஷேக் அப்துர் ரஹ்மான் மக்கீ ரஜியல்லாஹு அன்ஹு

6. ஷேக் ஹுசைன் பின் சாலிஹா மக்கீ ரஜியல்லாஹு அன்ஹு

## ஆலா ஹஜ்ரத் ரஜியல்லாஹுதஆலா அன்ஹுவின் முதல் பத்வா ( மார்க்கத் தீர்ப்பு)

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தன்னுடைய மார்க்க படிப்பை முடித்து அதில் தேர்ச்சிப் பெற்ற வல்லுநர் என்று சான்றிதழ்கள் பெறும் சமயத்தில், ஹஜ்ரத் அவர்களிடத்தில் ஒரு வினா கேட்கப்பட்டது, தாய்ப்பாலானது குழந்தையினுடைய வயிற்றை சென்றடைந்தால், அக்குழந்தை அப்பெண்ணால் வளர்க்கப்பட்ட குழந்தை ஆகுமா? ஆகாதா?

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள், தெளிவான முறையில் தன்னுடைய 13 வயதில் அழகாக பதில் சொன்னார்கள். “தாய்ப்பாலானது குழந்தையினுடைய மூக்கின் வழியாகவோ அல்லது வாயின் வழியாகவோ குழந்தையினுடைய

வயிற்றை சென்றடைந்தால், அக்குழந்தையானது அப்பெண்ணால் வளர்க்கப்பட்ட குழந்தை போன்றதேயாகும். மேலும் அக்குழந்தைக்கு, அப்பெண்ணை மணமுடிப்பது என்பது ஹராம் ஆகும்.

ஆதாரம் : அல் மல்பூஸ்,பாகம் 1,பக்கம் 12

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுடைய தெளிவான ஞானமிக்க பதில்களால் மகிழ்வுற்ற அவரது தந்தை, பத்வா வழங்கும் பொறுப்பை தன்னுடைய மகனிடத்தில் ஒப்படைத்தார். தினமும் நூற்றுக்கணக்கான பத்வாக்களை கண்ணியத்துடனும், மார்க்கப் பொறுப்புணர்வுடனும் வழங்கினார்கள். ஹஜ்ரத்திடம் பதிலை பெறுவதற்கு அரபி, உருது, ஹிந்தி, பாரசீகம், ஆங்கிலம் மற்றும் பல மொழிகளில் கேள்விகள் வந்து கொண்டிருக்கும்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுடைய பத்வாக்களைப் பற்றி புர:ப்பஸர் Dr.J.M.S. பல்ஜன், இஸ்லாமியத்துறை ஆராய்ச்சி, லீடன் பல்கலைக்கழகம்(ஹாலாந்து) கூறுகையில், “ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஒரு மிகப்பெரிய மாபெரும் அறிவுக்களஞ்சியம், அவர்களுடைய பதில்கள் அறிவியல் மற்றும் ஆன்மீக கண்ணோட்டத்துடன் ஒத்துப்போகும். பதில்களுக்கான ஆதாரங்கள் தரும் விதமும், அவரின் விவாதமும் பிரம்மிக்கதக்கதாக இருக்கும்.”

## ஆலா ஹஜ்ரத் ரஜியல்லாஹுதஆலா அன்ஹுவின் இல்வாழ்க்கையும்.குழந்தைகளும்

சையதீ ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தன்னுடைய 18 வயதில், ஹிஜ்ரி 1291 (1874)ம் ஆண்டு கண்ணியமிக்க சைய்யிதா இர்ஷாத் பேகம் ரஜியல்லாஹுதஆலா அன்ஹா அவர்களை மணம் முடித்தார். அல்லாஹுதஆலா இந்த கண்ணியமிக்க தம்பதியினருக்கு 2 மகன்கள், 5 மகள்களை கொடுத்தான். 2 மகன்களும் போற்றத்தக்க மார்க்க ஞானத்தையும், சிறந்த அவ்லியா அல்லாஹ் என்ற அந்தஸ்தையும் பெற்றனர்.

மூத்த மகனார் ஹுஜ்ஜதுல் இஸ்லாம், ஹஜ்ரத் அல்லாமா மவ்லானா முஹம்மத் ஹாமித் ரஜா கான் நூரி பரகாதி ரஜியல்லாஹுதஆலா அன்ஹு தம் தந்தையைப் போன்று கல்வி, ஞானக்கடலில் தேர்ச்சிப் பெற்றவர். அண்ணார் அவர்கள் ஹிஜ்ரி 1362 வருடம் 17 ஜமாதியுல் அவ்வல் அன்று தொழுது கொண்டிருக்கும் போது உலக வாழ்க்கையிலிருந்து மறைந்தார். இவர்களின் புனிதமிகு மஜார் ஷரீ∴ப் பரேல்வியில் (உ.பி) உள்ளது.

இளைய மகனார் காலத்தின் கௌது, ஹுஜுர் மு∴ப்தியே ஆஜ(z)ம் ஹிந்த் என்ற அஷ் ஷா இமாம் முஸ்தபா ரஜா கான் நூரி பரகாதி ரஜியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் தம்முடைய அண்ணணின் வழிகாட்டுதலில் கல்வி ஞானக்கடலில் தேர்ச்சிப் பெற்றார். ஹுஜுர் மு∴ப்தியே ஆசம் ஹிந்த் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுக்கு 10 இலட்சம் முரிதுகள் உலகளவில் உள்ளனர். ஹஜ்ரத் அவர்கள் 15ம் நூற்றாண்டின் முஜத்தித் (இஸ்லாத்திற்கு உயிரூட்டுபவர்) என்றும் அழைக்கப்படுகிறார். அண்ணார் அவர்கள் 14 மொஹரம், 1402 ஹிஜ்ரியில் உலக வாழ்க்கையிலிருந்து மறைந்தார்கள். இவர்களின் புனிதமிகு மஜார் ஷரீப் பரேல்வியில் (உ.பி) உள்ளது.

## <u>ஆலா ஹஜ்ரத் ரஜியல்லாஹுதஆலா அன்ஹு ஒரு ஞானக்கடல்</u>

சையதீ ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தம் தந்தையிடத்தில் கற்ற கல்வியின் விவரம்

1. திருக்குர்ஆன் தப்ஸீர்
2. ஹதீஸ்களின் தப்ஸீர்
3. ஹதீஸின் கொள்கைகள்(உசூலே ஹதீத்)
4. இஸ்லாமியச் சட்டங்கள் (4 மத்ஹபுகள்)
5. சட்ட தத்துவ கொள்கைகள்(உசூலே ∴பிக்ஹ்)
6. மொழிகளின் இலக்கியம்
7. திருக்குர்ஆன் விளக்க உரை
8. ஈமானுடைய கொள்கைகள்
9. விவாதக் கொள்கைகள்
10. அரபிச் சொற்றொடர் இலக்கணம்

11. அணியிலக்கணக் கொள்கைகள்
12. உருவக அணியைக் கொண்டு மொழி அமைத்தல்
13. அறிவியல் சம்பந்தமான அணியிலக்கணம்
14. நியதி முறை (அ) தர்க்க முறை
15. விவாதங்கள்
16. அரசியல் கொள்கைகள் மற்றும் அதன் தத்துவம்
17. அணியிலக்க திட்டம்
18. இயற்பியல்(பௌதீகம்)
19. கணிதம்
20. இயற்பியல் கணிதம்(Physical Engineering)

ஆதாரம் : அல் ஜாசதுல் முதய்யனா பக்கம் 22

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, பிற உலமாக்களிடம் கற்ற கல்வியின் விவரம்.

1. திருக்குர்ஆன் மனனம் செய்தல்
2. சரியான ஓசையுடன் திருக்குர்ஆன் ஓதுதல்
3. உண்மையையும் பரம்பொருளையும் காணும் கல்வி
4. மறைவானவற்றை அறியும் கல்வி
5. இஸ்லாமிய நீதி நெறி
6. ஹதீது அறிவிப்பாளர்களின் பெயரை அறிதல்
7. நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் வாழ்க்கை வரலாறு.
8. இஸ்லாமிய வரலாறு
9. அரபி இலக்கண இலக்கியம்
10. இலக்கியம் - ஓர் விஷயத்தை பற்றிய முழுமையான விவரம் அறிதல்.

சையதீ ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் எந்த ஒரு ஆசிரியரின் உதவி இல்லாமல் தானாகவே அறிந்து கொண்ட கல்வியின் விவரம்...

1. எண் கணிதம் (Arithmetic)
2. குறி கணக்கியல் (Algebra)
3. மேலும் கணிதத்தின் 12 கிளை பிரிவுகள்
4. நவீன வானவியல் (Astronomy)
5. மரபுவியல் (Science of Inheritance)

6. யாப்பிலக்கண அறிவியல் (Prosody)
7. வான சாஸ்திரம் ( Astrology)
8. வரலாறு அறிவியல் (Science of History)
9. ஹிந்தி உரைநடை
10. பாரசீக உரைநடை
11. பாரசீக மொழி எழுதுதல்
12. ஆழமான அரபி மொழி ஞானம்

மேலும் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி பல துறைகளில் மொத்தம் 54 வகையான ஞானங்களைப் பெற்றிருந்தார்கள்.

ஒரு முறை ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடத்தில் கடினமான கணித தேற்றங்களை (Theorems) எப்படி சுலபமாக கையாளுகிறீர்கள்? என்று வினா கேட்டதற்கு, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி "எனக்கு எந்த ஆசிரியரும் இந்தத் துறைகளில் கிடையாது இருப்பினும் நீங்கள் என்ன என்னிடம் காண்கின்றீர்களோ, அது எல்லாம் நான்கு சுவர்களான என்னுடைய அறையில் கிடைக்கப் பெற்றேன். இது ரசூல் ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லமின் கிருபை ஆகும்."என்றார்.

***ஆதாரம் : அல் மீசான்,பக்கம் 342***

ஒரு முறை மவ்லவி அப்துல் ஹக் கைராபாதி, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடத்தில் "நீங்கள் எந்தத் துறையில் (Specialised) சிறந்தவர்கள்?" என்று வினவினார்.

அதற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி " நான் பத்வா (மார்க்கத் தீர்ப்பு) வழங்குவதிலும், புத்தகங்கள் எழுதுவதிலும் என்னுடைய வேலை சென்றுக் கொண்டிருக்கின்றது. இருப்பினும், எந்த நேரத்தில் எந்தத் துறையில் அவசியம் தேவைப்படுமோ, அந்தத் துறையில் அக்கணமே சிறந்து விளங்குவேன். மேலும் வஹாபிகளின் ( தப்லீக் ஜமாத், அஹ்லே ஹதீஸ், காதியானி, மேலும் பல வஹாபிகள்) வாதத்திற்கும் பதில் கொடுக்க தயாராக இருப்பேன்." என்றார்கள்.

## ஹதீஸ்களின் ஞானம்

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் ஹதீஸ்களின் கொள்கைகளை அறிந்திருந்தார். ஏறக்குறைய ஒவ்வொரு ஹதீஸ் அறிவிப்பாளரின் முழுமையான வரலாற்றையும் அறிந்திருந்தார்கள். ஒரு ஹதீஸை அறிவிக்கும் போது ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள், அந்த ஹதீஸின் வகை, அந்த ஹதீஸின் நன்மைகள், அந்த ஹதீஸின் முழுமையான காரண காரியம் ஆகிய எல்லாவற்றையும் கூறுவார்கள். நிறைய சிறு சிறு புத்தகங்களை ஹதீஸின் வகைகளைக் கொண்டு தனியாக பிரித்து எழுதியுள்ளார்கள். அவற்றில் ஒன்றுதான் "ஹாஜிசுல் ஜரைன் அன் ஜம்மா பைனஸ்"என்ற புத்தகம் ஆகும். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை ஹதீஸ்களின் ஆராய்ச்சியாளர் என்று கூறினால் மிகையாகாது.

ஒரு பெரியவர் கூறுகிறார் ஆராய்ச்சி தன்மையும் கவிதை நயமும் ஒருவரில் இரண்டற இணைவது இயலாத காரியம். ஆனால் இமாம் அஹமத் ரஜா கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மட்டும் இதற்கு விதிவிலக்கு, ஏனெனில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஒரு சிறந்த கவிஞர் ஆவார்.

## பத்வா (மார்க்கத் தீர்ப்பு) வழங்குவதில் ஞானம்

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி தன்னுடைய ஆன்மீக ஞானத்தாலும், கல்வி அறிவாலும் அல்லாஹ்வின் பேரருளைக் கொண்டு நியாயமான மார்க்கத்தீர்ப்புகள் வழங்கினார்கள். ஷரிஅத்தே முஸ்தபா ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் (இஸ்லாமியச் சட்டம்) பேணுவதில் ஹஜ்ரத் அவர்கள் மிகத் தீவிரமாக இருப்பார். ஆம்! ஷரிஅத் படி நடக்கிறவர்கள்தான் ஷரிஅத் சம்பந்தமான பிரச்சினைகளை தீர்க்க வல்லவர் என்பது தீர்க்கமான கருத்து. ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் பத்வாக்களின் தொகுப்பு "பத்வாயே ரஜ்வியா" என்று அழைக்கப்படுகிறது. 12 பாக (Volumes) புத்தகங்களின் இந்த பத்வாயே ரஜ்வியா ஏறக்குறைய 12000 பக்கங்களைக் கொண்டது.

இன்றும் உலகளவில் பத்வாக்களை வழங்குபவர்கள் பத்வாயே ரஜ்வியாவையே ஆதாரமாகக் கொள்கின்றனர்.

## அறிவியல் ஞானம்

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தன்னுடைய “பவுஜே முபீன் தர் ஹர்கதே ஜமீன்” என்ற நூலில் திருக்குர்ஆன் வசனங்களை ஆதாரமாகக் கொண்டு பூமி சுற்றுவதில்லை மாறாக பூமி நிலையாக இருக்கிறது என்றும் மேலும் மற்ற கோள்கள் அனைத்தும் பூமியை மையமாகக் கொண்டு சுற்றுகின்றது என ஆதாரப்பூர்வமாக விளக்குகிறார்கள். ஆனால் நவீனகால வானவியல் பூமி தன்னைத்தானே சுற்றிக்கொண்டும், மற்றக் கோள்களும் சூரியனை மையமாகக் கொண்டு சுற்றுகின்றது என கூறுகின்றது. இந்த தவறான விளக்கத்திற்கு, தவறு என்றும் தன்னுடைய நூலில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஆதாரப்பூர்வமாக விளக்குகிறார்கள். சில இடங்களில் கலிலீயோ மற்றும் சர் ஐசக் நியூட்டனின் சில தவறான தேற்றங்களுக்கு (Theorems) ஆதாரம் தருகிறார்கள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அவர்களுடைய வானவியல் புத்தகத்தை நம்மில் நன்கு அறிவியல் பயின்றவர்கள் ஆங்கில மொழியாக்கம் செய்து மேற்கத்திய ஆராய்ச்சியாளருக்கு கொடுத்தால் நவீன உலக வானவியலில் மாற்றம் வர வாய்ப்புண்டு!

## வானவியல் மற்றும் ஓதிப்பார்த்தல் ஞானம்

மவ்லானா குலாம் ஹுசைன் சாஹிப் ஓதிப்பார்த்தல் கலையில் பெயர் பெற்றவர். ஒரு நாள் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை சந்திக்க நேரிட்டது, அப்பொழுது ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மவ்லானா குலாம் ஹுசைனிடம் மழையின் நிலவரம் என்ன? எனக் கேட்டார்கள். மவ்லானா குலாம் ஹுசைன் நட்சத்திர சம்பந்தமான அட்டவணையை எடுத்து கணக்கு போட்டு இந்த மாதத்தில் மழை இல்லை என்றும் அடுத்த மாதத்தில் தான் மழை பெய்யும் என்று சொல்லிவிட்டு நட்சத்திர அட்டவணையை ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடத்தில் கொடுத்தார். ஆலா

ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஒரு முறை பார்த்துவிட்டு, “அல்லாஹ் நினைத்தால் இப்போதே மழை பெய்யும்” என்றார். மவ்லானா குலாம் ஹுசைன், ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹியை நோக்கி நீங்கள் நட்சத்திர அட்டவணையைப் பார்க்கவில்லையா? என்றார். அதற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி “நான் எல்லாவற்றையும் கவனித்து கொண்டிருக்கின்றேன்” என்றார்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி கடிகாரத்தை பார்த்தவாறே மணி என்ன? எனக் கேட்டார். அதற்கு மவ்லானா குலாம் ஹுசைன் 12 ஆவதற்கு மூன்று கால் பங்குகள் மீதி இருக்கின்றது (11.15) என்றார். இதைக் கேட்டவுடன், ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தன்னுடைய தாத்தாவின் கடிகாரத்தை நெருங்கி தன் விரல்களால் பெரிய முள்ளை சுற்றி நேரத்தை 12 மணி ஆக்கினார், கடிகார மணி ஒலித்தது.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மவ்லானா குலாம் ஹுசைனை நோக்கி மணி 12 எனக் காட்டுகின்றதே என்றார். அதற்கு மவ்லானா குலாம் ஹுசைன் “கடிகார முட்கள் இடம் பெயருவதற்கு காரணம் நீங்கள் தானே!” என்றார். இதைக் கேட்டதும் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி “***அல்லாஹ்விற்கே அனைத்து அதிகாரமும் அவன் நினைத்தால் நட்சத்திரங்களின் நிலைகளையும் மாற்றுவான் அவனது விருப்பப்படி…..***” என்று வாக்கியத்தை சொல்லி முடிப்பதற்குள் மழை வேகமாக கொட்டத் துவங்கியது! சுப்ஹானல்லா!!!

## கணித ஞானம்

சர் ஜியாவுத்தீன் என்ற பிரபலமான கணித மேதை தன்னுடைய ஆராய்ச்சியின் காரணமாகவும், அந்த ஆராய்ச்சியில் வரும் கணித குழப்பங்களை தெளிந்து கொள்வதற்காகவும் ஜெர்மனியில் உள்ள பெர்லின் நகருக்கு செல்ல திட்டமிட்டார். சில மவ்லானாக்களின் தொடர்பால் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் கணித ஞானம் சொல்லக்கேட்டு

மனமில்லாமல், இவர் எப்படி என்னுடைய கணித சந்தேகங்களை தீர்த்து வைப்பார்? அறிவை வளர்த்துக்கொள்வதற்காக தன்னுடைய பரேல்வி நகரைக் கூட தாண்டாதவரால் எப்படி முடியும்? என்ற எண்ணங்களுடன் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை சந்தித்தார். சர் ஜியாவுத்தீன் தன்னுடைய ஆராய்ச்சியின் கணித சந்தேகங்களை ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடம் கொடுத்துவிட்டு "முடிந்தால் இந்த சந்தேகங்களை தீர்த்து வையுங்கள், நான் பெர்லின் நகருக்கு சென்று வருகிறேன்." என்றார். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தன்னுடைய எழுத்து வேலைகளில் மும்முரமாக இருந்தவாறே, சர் ஜியாவுத்தீனுடைய பேச்சையும் கேட்டு கொண்டிருந்தார்கள். சற்று நேரத்தில் சர் ஜியாவுத்தீன் பேச்சை முடித்துக்கொண்டு "வருகிறேன்" என்று சொல்லிவிட்டு கிளம்ப தயாரானார்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, சர் ஜியாவுத்தீனை அழைத்து ஒரு காகித்தை நீட்டினார்கள். என்ன ஆச்சரியம் அந்த காகிதத்தில் அவருடைய கணித சந்தேகத்திற்கான விடை இருந்தது. இதைக் கண்டதும் சர் ஜியாவுத்தீன் கூறலானார், "இன்று நான் நம்புகிறேன், உங்களிடம் ஏதோ ஒரு வியப்பூட்டும் ஞானம் உள்ளது" என்றார். மேலும் முறையாக கல்விச்சாலை சென்று கணிதம் பயிலாத ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, ஏற்கனவே இந்த ஆராய்ச்சியை செய்தது போல் மிக எளிமையாக விடையை தந்தார்கள். இது கணிதத்துறையிலே இருக்கும் என்னால் முழுமுயற்சியை செய்த போதிலும் முடியாமல் போனது ஆகும் என்று ஆச்சரியப்பட்டார்.

## இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹு அன்ஹுவின் இல்மே ஜா.ஃ.பர்

இல்மே ஜா.ஃ.பர் என்ற "அறிவானது பின்னர் நடக்க இருப்பதை முன்பே அறியும்" ஒரு கலையாகும். இது பொதுவாக அல்லாஹ்வின் இறைநேசர்களுக்கு கிடைக்கப்பெறும் அல்லாஹ்வின் பேரருளாகும்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடத்தில் ஒரு முறை கியாமத் நாளின் அறிகுறிகளும், இமாம் மஹதி அலைஹிஸலாம் அவர்களின் வருகையும் எதிர்காலத்தில் எப்போது நிகழும்? எனக்கேட்கப்பட்டது. அதற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி " அல்லாஹ்வும் அவனது ரசூலும் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) மிக நன்றாக அறிவார்கள்" என்றார். பிறகு திருக்குர்ஆன் வசனங்களையும், ஹதீஸ்களையும் ஒன்றன் பின் ஒன்றாக வரிசையாக கியாமத் நாள் பற்றி கூறிக்கொண்டே வந்தார்கள். பிறகு கூறலானார்கள் " ஒரு விதமான அறிவைக்கொண்டு, நான் நினைக்கிறேன் ஹிஜ்ரி 1837 ல் உலகின் எந்த ஒரு இடத்திலும் இஸ்லாமிய ஆட்சி இருக்காது, அந்த தருணத்தில் ஹிஜ்ரி 1900 ல் இமாம் மஹதி அலைஹிஸலாம் தோன்றுவார்கள் – சாத்தியம் இருக்கிறது" இதைக் கேட்ட சில பேர் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை நோக்கி, நீங்கள் இல்மே ஜா.ஃ.பர் அறிவைக் கொண்டு அறிந்தீர்களா? எனக் கேட்டனர். அதற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி சிரித்தவாரே " மாம்பழங்களை சாப்பிடுங்கள், மரங்களை எண்ணாதீர்கள்" என்றார்.

ஒரு முறை ராம்பூர் மன்னரின் மனைவி மிகவும் நோய்வாய்ப்பட்டிருந்தாள், மன்னர் அவளை மிகவும் நேசித்தான். இஸ்லாத்தை முறையாக பேணுவதில் மன்னன் அக்கறையில்லாதவன். சிபாரிசுகளின் மூலமாக ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுக்கு செய்தியை அனுப்பினான், அதில் தன்னுடைய மனைவி எப்பொழுது? எங்கே இறப்பாள்? எனக் கேட்டிருந்தான். அச்சமயம் அவள் மனைவி நைனிடால் என்ற ஊரில் இருந்தாள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மன்னனிடம் தூதுவனை அனுப்பினார், அத்தூதுவில் மன்னனின் மனைவி ராம்பூரில் இறப்பாள் எனவும், மொஹரம் மாதம் நிகழும் எனவும் கூறியிருந்தார்கள். அதனால் மன்னர் தனது மனைவியை ராம்பூரில் தங்க விடாமலும், ராம்பூரின் எல்லைக்கு அப்பால் தங்க வைத்தும் வந்தான்.

ஒருநாள் திடீரென்று கான்பூர் ஷஹீத் கன்ஞ் பள்ளிவாசல்

பிரச்சினையின் காரணமாக ராம்பூரில் கலகம் வெடித்தது. ராம்பூரின் கவர்னர் இந்தப் பிரச்சினையை தீர்ப்பதற்காக மனு ஒன்றை மன்னருக்கு அனுப்பினான். அதில் நேரில் மன்னரை பார்த்து பேச வேண்டிய உடனடி அவசியம் இருப்பதால், மன்னரை ராம்பூருக்கு வருமாறு அழைப்பு விடுத்திருந்தான். எதேச்சையாக மன்னரின் மனைவியும் பயணத்திற்கு தயாராகி இருவரும் ராம்பூர் வந்து சேர்ந்தனர். ராம்பூர் வந்து சேர்ந்த சில மணித்துளிகளில் திடீரென்று மன்னனின் மனைவி இறந்தாள். அந்த நாள் மொஹரம் மாதமாக இருந்தது. ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் கணிப்பை இச்சம்பவம் உண்மைப்படுத்தியது!

## திருக்குர்ஆன் மொழிப்பெயர்ப்பு மற்றும் விளக்கவுரை ஞானம்

உருதுமொழியில் பல பேர் திருக்குர்ஆன் மொழிப்பெயர்ப்பு செய்துள்ளனர். ஆனால் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் திருக்குர்ஆன் மொழிப்பெயர்ப்பான ''கன்ஜுல் ஈமான்'' மற்ற மொழிப்பெயர்ப்புகளுடன் ஒப்பிடும் போது தன்னிகரற்ற ஓர் தனித்துவம் வாய்ந்ததாக உருதுமொழியில் விளங்குகிறது. இது அனைத்து உலக மக்களாலும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. காரணம் என்னவெனில், ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி திருக்குர்ஆன் மொழிப்பெயர்ப்பில் பயன்படுத்திய ஒவ்வொரு வார்த்தைகளும் அல்லாஹ் மற்றும் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் உயர்ந்த தன்மைகளுக்கு ஏற்ற கருத்தை வெளிப்படுத்தும் தரம் மிக்க சொற்களாக இருப்பதே ஆகும்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் திருக்குர்ஆன் மொழிப்பெயர்ப்பு வெறும் எழுத்து வேலையாக மட்டும் இல்லாமல், திருக்குர்ஆனின் சிறந்த விளக்கமாகவும் அமைந்தது. இதனைப் பற்றி ஹஜ்ரத் சைய்யதினா முஹத்திஸே ஆஜம் ஹிந்த் ரஜியல்லாஹு அன்ஹு கூறுகையில் '' இது திருக்குர்ஆனின் மொழிப்பெயர்ப்பு மட்டும் அல்ல, இதுதான் திருக்குர்ஆன்'' என்கிறார்.

நாம் ஒரு மாதிரிக்காக, திருக்குர்ஆன் வசனமான **சூரா 93,**

**ஆயத் 7 ல்** அல்லாஹ், நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமை பார்த்துக் கூறுவதாக வரும் வாக்கியத்தை மொழிப்பெயர்ப்பில் மற்றவர்கள் செய்த விதத்தையும், ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் மொழிப்பெயர்ப்பையும் ஒப்பிட்டு பார்ப்போம்.

1) “மற்றும் நீங்கள் வழி தவறியவர்களாக கண்டான் மற்றும் அவன் உங்களுக்கு வழிகாட்டினான்”

- **அபுல்கலாம் ஆசாத்**

2) “மற்றும் நீங்கள் இருட்டில் இருப்பதாக கண்டான் அதனால் அவன் உங்களுக்கு பாதையைக் காட்டினான்”

- **முஹம்மத் அலி லாகூரி காதிரி**

3) “மற்றும் நீங்கள் இஸ்லாமியச் சட்டம் தெரியாதவர்களாக அவன் கண்டான், அதனால் உங்களுக்கு இஸ்லாமியச் சட்டம் சொல்லிக்கொடுத்து வழி காண்பித்தான்”

- **அஷ்ரப் அலி தானவி**

4) “வழி தவறியவர்களாக காணவில்லை மற்றும் வழி நடத்தினான்” - **ஆர்பெர்ரி**

5) “மற்றும் நீங்கள் அறியாதவர்களாக இருப்பதை அவன் பார்த்தான், அதனால் உங்களுக்கு நேரான பாதையைக் காண்பித்தான்” -**பத்ஹா முஹம்மத் ஜலந்தரி**

6) “மற்றும் அவன், உங்களை திரிந்து அலைந்து கொண்டிருப்பதாக கண்டான் மற்றும் அவன் உங்களுக்கு வழி காட்டினான்” - **யூசுப் அலி**

**சூரா 93, ஆயத் 7 ல்** வரும் ஆயத்திற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் ஒப்பற்ற, ஈடு இணையற்ற அற்புதமான மொழியாக்கத்தை இப்போது பார்ப்போம்,

“ ***மற்றும் அவன் உங்களை அவனது அன்பினில்***

***மூழ்கியிருப்பதாகக் கண்டான், அதனாலயே அவனிடத்திற்கே சென்றடையும் வழியைக் கொடுத்தான்"***

**- சையதீ ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி**

**<u>உலமாக்களின் தெளிவுரை</u>**

ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இறைவனது அன்பினில் எப்பொழுதுமே மூழ்கியிருப்பதால், லா இலாஹா இல்லல் லா ஹு என்ற ஏகத்துவத்தில் ஒன்றாகி, அவனிடத்திற்கே சென்றடையும் வழியைக் கொடுத்தான்.

**மாதிரி 2:**

**சூரா ∴பத் ஆயத் 1ல் வரும் வசனத்திற்கு மொழியாக்கம் :**

1. உமது பாவங்களில் முந்தியவற்றையும், பிந்தியவற்றையும் மன்னிப்பதற்காக இந்த வெற்றியைக் கொடுத்தோம்.

- அஷ்ரப் அலி தானவி,
- கே. ஏ. நிஜாமுத்தீன் மன்பயீ
- ஆர்.கே. அப்துல் காதிர் பாகவி
- அப்துல் வஹாப் M.A.

2. ***உமது முன்னோர்கள் மற்றும் பின்னோர்களின் (உம்மத்துகளின்) பாவங்களை மன்னிப்பதற்காக இந்த வெற்றியை கொடுத்தோம்.***

**- சையதீ ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி**

**உலமாக்களின் தெளிவுரை:**

ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பாவங்களை விட்டு தூய்மையானவர், அவர் பாவம் செய்தவர் என்று கூறினால் நமது ஈமான் பறிபோய்விடும். நிச்சயமாக முன்னோர்களின் பாவங்களையும் பின்னால் வரக்கூடிய உம்மத்துகளின் பாவங்களையும் மன்னிக்கும் பொருட்டும், இஸ்லாத்தை பரிபூரணம் செய்வதற்கும் இந்த வெற்றியை அல்லாஹ் அளித்தான். ( முழுமையாக இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர்கள்-பாவங்களை விட்டு தூய்மைப் படுத்தப்படுகிறார்கள்.)

**மாதிரி 3 :**
**சூரா ∴பாத்திஹா ஆயத் 5ல் வரும் வசனத்திற்கு மொழியாக்கம் :**

1. எங்களுக்கு நேரான பாதையை காட்டுவாயாக!
   - அஷ்ரப் அலி தானவி மற்றும் ஒட்டு மொத்த வஹாபிகள்

***2. எங்களை நேரான பாதையில் நடத்துவாயாக!***
**-சையதீ ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி**

**உலமாக்களின் தெளிவுரை :**

நேரான பாதையை காட்டுவாயாக! எனில், நாங்கள் இதுவரை சத்தியமான பாதையை கண்டதில்லை அதனால் இறைவா! எங்களுக்கு காட்டுவாயாக! நாங்கள் பார்த்துக் கொள்கிறோம். சத்தியப்பாதையில் நடப்பதற்கு மனமில்லை என்றும் கூறலாம்.

மாறாக, நேரான பாதையில் நடத்துவாயாக! என்பதற்கு ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், அல்லாஹ்வின் பிரியமான நபியாக வந்ததன் பொருட்டும், நாங்கள் அவர் மீது வைத்த முழு நம்பிக்கையால் (ஈமானால்) நாங்கள் நேர்வழியான சத்தியத்தை (உண்மையை) கண்டுக்கொண்டோம். ஆனால், இறைவா! (அல்லாஹ்) நாங்கள் நடப்பதற்கு சக்தியற்றவர்களாக இருக்கிறோம். அதனால் நீ எங்களை சத்தியப்பாதையில் நடத்துவாயாக! என்று கூறுகிறோம்.

பாருங்கள்! ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் ஒப்பற்ற, ஈடு இணையற்ற உண்மையான மொழிப்பெயர்ப்பு! மேலும் புனித நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் மரியாதைக்கு குறைவு ஏற்படாமலும், கண்ணியத்துடனும், மிகக் கவனமுடன் அழகான சொற்களை பயன்படுத்துவது ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் தனிச்சிறப்பாகும்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள்,

தன்னுடைய அதிகப்படியான நேரத்தை சட்டம் சம்பந்தமான புத்தகங்களை எழுதுவதிலும், பத்வா வழங்குவதிலும் செலவழித்தார். அதனால் முழுத் திருக்குர்ஆனிற்கும் விளக்கவுரை எழுத நேரமில்லாமல் போனது. இருப்பினும் சில நன்கு கல்விக் கற்ற மேதைகளின் கருத்தாவது, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் அனைத்து புத்தகங்களையும் ஒன்று திரட்டினால் முழுத் திருக்குர்ஆனின் விளக்கவுரை கிடைக்க அதிக வாய்ப்புகள் இருப்பதாகக் கூறுகின்றனர்.

''பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம்'' என்பதற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் நீண்ட சொற்பொழிவு புத்தக வடிவில் உள்ளது. எளிய நடையில் உள்ள இந்த நூல் ''அல் மீலாதுன் நபிவிய்யா'' என்ற தலைப்பில் உள்ளது.

ஒரு முறை, ஹஜ்ரத் மவ்லானா ஷா அப்துல் காதிர் சாஹிப் ரஜியல்லாஹுதஆலா அன்ஹீவின் சந்தனக்குட (உரூஸ்) வைபவத்தில் ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி சூரா வத்துஹா பற்றி காலை 9 மணியிலிருந்து பிற்பகல் 3 மணி வரை தொடர்ந்து 6 மணி நேரம் சூரா வத்துஹாவை மட்டும் விளக்கினார். தன்னுடைய விளக்கவுரையை முடித்துக்கொண்டு சொன்னார்கள் '' நான் 80% விளக்கவுரையைதான் இந்த சூராவிற்கு எழுதியுள்ளேன்'' என்றார். அப்படியானால் முழுத் திருக்குர்ஆனிற்கும் விளக்கவுரை எழுதுவதற்கு நேரம் எப்படி கிடைக்கும்? என்று நாம் யோசித்துப் பார்க்க வேண்டும்.

## கவிதை ஞானம்

இமாம் அஹமத் ரஜா(z) கான் ரஜியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் தம்முடைய அதிகப்படியான நேரத்தை கவிதை இயற்றுவதில் செலவழிப்பார்கள். இவருடைய கவிதைகள் அனைத்தும் புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றிய புகழ் பாமாலைகளாகும். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் கவிதைகளிலிருந்து அவருடைய ஆன்மா மற்றும் நெஞ்சம் நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காதல் கடலில் மூழ்கியிருப்பதை கண்டுக் கொள்ளலாம்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் கவிதைகள் ஷரிஅத் சட்ட வரம்பிற்குள் இருக்கும். ஒவ்வொரு கவிதை வரிகளும் "இல்ஹாம்" என்ற முத்துக்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கும். "இல்ஹாம்" என்பது அவ்லியா அல்லாக்களின் மனதில் அல்லாஹ்வால் மகிழப்பட்டு அருளப்பெற்ற ஓர் உன்னதமான உணர்வு ஆகும். இது அம்பியா அலைஹிஸலாம்களுக்கு கிடைக்கப்பெற்ற வஹீயைப் போன்று, அவுலியாக்கள் "இல்ஹாம்" கிடைக்கப் பெறுவார்கள்.

கவிதை என்பது பெரும்பாலும் கற்பனையாகவே அமையும். ஆனால் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் ஒவ்வொரு கவிதை வரிகளும் திருக்குர்ஆன் மற்றும் ஹதீஸ்களின் விளக்கவுரையை பிரதிபலிப்பதாக இருக்கும். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தன்னுடைய கவிதைகளை அரபி, உருது, பாரசீக மொழிகளில் இயற்றினார்கள். இது எல்லாம் ஒன்றாக தொகுக்கப்பட்டு "ஹதாயிகே பக்ஷிஷ்" (பாவங்கள் மன்னிக்கப்படும் பூங்காவனம்) என்ற புத்தக வடிவில் உள்ளது. உலக அளவில் உள்ள மக்கள் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய காதலை தெரிவிப்பதற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹிவின் கவிதைகளையே நெஞ்சம் உருக, கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக, நல்ல ராகங்களோடு படிக்கின்றனர். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் கவிதைகளில் ஒன்றான,

**"உன் கி மஹக் னே தில் கி குன்ச்சே கிலா தியா ஹை.**
**ஜிஸ் ராஹ் சல் தியே ஹை கூச்சே பஸா தியா ஹை."**

(ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமுடைய நறுமணம் மனதினுடைய மூலை முடுக்கெல்லாம் பரவியது. எந்த பக்கம் சென்றார்களோ, அந்த மூலைகளெல்லாம் அவருடைய வசம் ஆயின.)

என்ற முதல் அடியாக தொடங்கும் கவிதையை ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள், அக்காலத்தில்

கவிதை இயற்றுவதில் சிறந்து விளங்கிய ஜனாப் தாக் தெஹ்லவியிடம் கொடுத்தனுப்பி திருத்தம் ஏதாவது இருந்தால் சரிச் செய்ய சொன்னார்கள். இதைக் கேட்ட தாக் தெஹ்லவி வந்தவர்களை நோக்கி “நீங்கள் கொண்டு வந்திருப்பது ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் ஆலா (உயர்ந்த) கவிதை. இதில் திருத்தம் எனச் சொல்வதற்கும், இருப்பதற்கும் வாய்ப்பில்லை. ஆனால் இந்தக் கவிதைத் தொடர் முற்றுப்பெறாமல் உள்ளது. இதில் நான், கடைசி அடியை என்னுடைய பக்கத்திலிருந்து எழுத ஆசைப்படுகிறேன். தயவுச் செய்து ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடம் வேண்டிக் கொள்ளுங்கள், இதை மாற்றம் செய்ய வேண்டாமென்று” எனக் கூறி கடைசி வரியை இவ்வாறு எழுதினார்கள்.

**“முல்கே சுகன் கி ஷாஹி தும் கு ரஜா(z) முஸல்லம்**
**ஜிஸ் ஸிம்த் ஆகயே ஹோ, சிக்கே பிட்டா தியே ஹை”**

(அளவில்லா பெரு நிம்மதியை அளிக்கும் மையானது (பேனா மை) உங்களுடையதே ரஜா. நல்வாழ்த்துக்கள் உங்களுக்கு, நீங்கள் திரும்பிய திசையெல்லாம் ரசூல் ஸல்லல்லாஹீ அலைஹி வஸல்லமவர்களுடைய நினைவை, முத்திரை பதித்து விட்டீர்கள்.)

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, தான் புகழப்படுவதை விரும்பாத போதிலும் தாக் தெஹ்லவியின் வேண்டு கோளுக்கிணங்க அதை மாற்றம் செய்யாமல் விட்டுவிட்டார்கள். ஆனால் கல்வி அறிவு இல்லாத பேதைகள் மற்றும் வஹாபிகள் பலர் தம்மை தாமே புகழ்ந்துக் கொள்ளலாமோ? என்று உண்மைச் சம்பவம் தெரியாமல் உளறுகின்றனர். “அல்லாஹ் எல்லாம் அறிந்தவனாக இருக்கின்றான்.”

## <u>பைஅத் மற்றும் கிலா..பத் பெறுதல்</u>

ஹிஜ்ரி 1294 ல் தன்னுடைய 19 வயதில் சய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள், இமாமுல் அஸ்பியா

சைய்யதினா ஷா ஆலே ரசூல் ரஜியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களிடம் பைஅத் எனும் ஞானத்தீட்சை பெற்று அவரின் சீடரானார். பைஅத் பெற்ற அந்த ஆன்மீக நிகழ்ச்சியை விவரமாகக் காண்போம்.

ஒருமுறை ஹஜ்ரத் மவ்லானா அப்துல் காதிர் பதாயுனி ரஜியல்லாஹுதஆலா அன்ஹு பரேல்வி ஷரீ..ப்பிற்கு வருகைப் புரிந்து ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுக்கு மஹ்ரரா ஷரீ..ப்பிற்கு வருமாறு அழைப்பு விடுத்தார். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களும் அழைப்பினை ஏற்றுக்கொண்டு மஹ்ரரா ஷரீ..ப்பிற்கு இருவருமாக சேர்ந்துச் சென்றனர்.

மஹ்ரரா ஷரீ..ப்பின் இரயில் நிலையத்திற்கு வந்தடைந்தவுடன் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி “ நான் என்னுடைய முர்ஷதின் (ஆன்மீகக் குருவின்) வாசனையை நுகர்கின்றேன்” என்று கூறலானார்கள். இருவருமாக சேர்ந்து கான்காயே பரகாதியில் நுழைந்ததும், சைய்யதினா ஷா ஆலே ரசூல் ரஜியல்லாஹுதஆலா அன்ஹு - ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களைக் கண்டதும் “வாருங்கள், உங்களின் வருகைக்காக நான் நீண்ட காலமாக காத்திருக்கின்றேன்” என்றார்கள்.

சைய்யதினா ஷா ஆலே ரசூல் ரஜியல்லாஹுதஆலா அன்ஹு உடனடியாக ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அவர்களுக்கு பைஅத் கொடுத்து, அனைத்து சூ..பி சில்சிலாக்களின் கிலா..பத்தையும், இஜாஸத்தையும் (அனுமதி) கொடுத்து ஆசிர்வதித்தார்கள். அச்சமயம் ஹஜ்ரத் சைய்யதினா அபுல் ஹுசைன் நூரி பரகாதி ரஜியல்லாஹுதஆலா அன்ஹு (ஹஜ்ரத் மவ்லானா முஸ்தபா ரஜா கான் ரஜியல்லாஹு அன்ஹுவின் குருவாவார்) அந்த ஆன்மீகத்தீட்சை பரிமாறும் நேரத்தில் உடனிருந்தார். இவர் மிகச் சிறந்த அவ்லியா அல்லாஹ் ஆவார். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் சிறப்பை உணர்ந்தவரும் ஆவார்.

ஹஜ்ரத் அபுல் ஹுசைன் நூரி பரகாதி ரஜியல்லாஹுதஆலா அன்ஹு, சைய்யதினா ஷா ஆலே ரசூல் ரஜியல்லாஹுதஆலா அன்ஹுவை பார்த்து கேட்கலானார்கள், “ஹுஜுர் (தலைவரே), இந்நாள்வரை மஹ்ரரா ஷரீ∴ப்பின் வழக்கமானது யாராவது ஆன்மீகத்தீட்சை பெறவந்தால், அவரை முரிதாக்குவோம், அவரிடம் கிலா∴பத் பெற மனதில் எண்ணம் இருந்தால், நாம் அவரை இறைவழியில் ந∴ப்ஸிற்கு எதிராக போராட சொல்வோம். மேலும் அவரது பயிற்சிக்காக காய்ந்து போன ரொட்டித்துண்டுகளையும் சாப்பிடக் கொடுப்போம். இதற்குப் பிறகு, அந்த நபர் சரியாக இருக்கிறார் எனத் தெரிந்த பிறகே ஒன்று அல்லது இரண்டு சில்சிலாக்களின் கிலா∴பத்தையும், இஜாஸத்தையும் (அனுமதி) கொடுப்போம். ஆனால் இன்று இந்த வாலிபரை அனைத்து சில்சிலாக்களின் கிலா∴பத்தையும், இஜாஸத்தையும (அனுமதி) கொடுத்து ஆசிர்வதித்தீர்கள் மேலும் நீங்கள் எழுதிய புத்தகங்களை காட்டி, அதையெல்லாம் சரி பார்க்கவும் கூறினீர்கள். ஏன் இதெல்லாம்???” என்று ஆச்சரியத்துடன் வினவினார்கள்.

அமைதியாக கேட்டுக்கொண்டிருந்த சைய்யதினா ஷா ஆலே ரசூல் ரஜியல்லாஹுதஆலா அன்ஹு “ ஓ! மக்களே! உங்களுக்கு அஹமத் ரஜா பற்றி தெரியாது. இங்கு வரக்கூடிய மற்றவர்கள் கிலா∴பத்தும், இஜாஸத்தும் பெறுவதற்கு முன் தங்களை அவர்கள் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும். ஆனால் அஹமத் ரஜா கான், எல்லாம் வல்ல அல்லாஹ்வால் தயார்படுத்தப்பட்டே இங்கு வந்தார்கள். இப்பொழுது அவருக்கு தேவையானது எல்லாம் என்னுடைய தொடர்பு மட்டும்தான் அதனால்தான் அஹமத் ரஜா கானை என்னுடைய முரீதாக்கினேன் ( சீடராக்கினேன்)” என்றார். மேலும் “என் மனம் எப்பொழுதும் அல்லாஹ்வினுடைய பயத்தினால் அழுது கொண்டிருந்தது எல்லாம் கியாமத் நாளில் அவன் கேட்கும் வினாவான, உலகத்திலிருந்து எனக்காக என்ன கொண்டு வந்திருக்கிறாய்? என்பதற்கு இதுவரை எனக்கு விடை தெரியாமல் இருந்தது. ஆனால், இன்று அந்தக் கவலை தீர்ந்தது.

கியாமத் நாளன்று அல்லாஹ் என்னிடம், ஓ! ஆலே ரசூல்! எனக்காக என்ன கொண்டு வந்திருக்கிறாய்? எனக் கேட்பான் எனில்,

உடனடியாக என்னுடைய ரப்பிற்கு(இறைவனுக்கு) இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹு தஆலா அன்ஹுவை பரிசாக அளிப்பேன்'' என்றார்.

இந்த மேன்மைமிக்க சம்பவம் சையதீ ஆலா ஹஜ்ரத், அஜீமுல் பரக்கத், பாஜிலே பரேல்வி, இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹுதஆலா அன்ஹுவின் உயர்ந்த தரத்தை சுட்டிக் காட்டுவதற்கு சிறந்த சான்றாகும்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தன்னுடைய குருவின் மீதும் அவரது குடும்பத்தின் மீதும் அளப்பறிய மரியாதையையும், அன்பையும் வைத்திருந்தார்கள். தன்னுடைய குருவின் (முர்ஷதின்) தொடர்பு வைத்திருப்பவர்களையும் மிக்க மரியாதையை ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அளித்து வந்தார்கள். மஹ்ரரா ஷரீ.்.ப்பிற்கு சென்று முர்ஷதின் ஆசிகளை பெறச் செல்லும் போது, தன்னுடைய காலணிகளை இரயில் நிலையத்திலேயே வைத்துவிட்டு வெறும் கால்களுடன் நடந்து சென்று தன்னுடைய குருவிற்கு (முர்ஷதிற்கு) மரியாதையை செலுத்துவார்கள். யாராவது தன்னுடைய குருவிடமிருந்து ஏதாவது தகவல்களையோ, அல்லது பார்சல்களையோ கொண்டு வந்தால் அவர்களையும் மிக்க மரியாதையுடனும், கண்ணியத்துடனும் நடத்துவார்கள். வந்தவர்களை சாப்பிடாமல் செல்ல அனுமதி அளிக்கமாட்டார்கள், தானே வீட்டிற்குள் சென்று வந்தவர்களுக்கான உணவைத் தம் தலையில் வைத்துக் கொண்டு வந்து மிக்க மரியாதையுடன் உபசரிப்பார்கள். வந்தவர்களை மிக கண்ணியமான சொற்களால் மட்டுமே பேசுவார்கள்.

சைய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் பெற்ற கிலா.்.பத் மற்றும் இஜாஸத்தினால் லட்சக்கணக்கானோர்கள் ஹஜ்ரத் அவர்களின் முரிதானார்கள். இன்றளவும் கோடிக்கணக்கானவர்களை ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி வழி நடத்துகிறார்கள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அவர்கள் இந்தோ-பாக் துணைக்கண்டத்தில் 30 கலி.்.பாக்களையும், உலகின் மற்ற பகுதிகளில் 35 கலி.்.பாக்களையும் (பிரதிநிதிகள்) சேர்த்து மொத்தம் 65 கலி.்.பாக்களை உருவாக்கினார்கள்.

## முதல் புனித ஹஜ் பயணம்

ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமுடைய ரவ்லா (மஜார்) ஷரீ.'.ப்பை காணுவதற்கு அவர்களின் நேசர்கள் துடிப்பதை யாராலும் எழுதவும், சொல்லவும் முடியாது. ஆஷிகே ரசூல் (ரசூலுல்லாவின் காதலன்) இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹுதஆலா அன்ஹுவின் கண்கள் மதீனா தய்யிபாவின் தர்பாரை காணும் பாக்கியம் அவரின் முதல் ஹஜ்ஜில் ஷவ்வால் 26, ஹிஜ்ரி 1295 (1876) ல் தன்னுடைய 20 வது வயதில் கிடைத்தது.

கட்டாயமான ஹஜ் கடமைகளை முடித்தவாறு, ஒரு நாள் மக்(.'.)ரிப் தொழுகையை மகாமே-இப்ராஹீம் அலைஹிஸலாம் இடத்தில் தொழுது கொண்டிருந்தார்கள். தொழுது முடித்தவுடன் அவரை நோக்கி, மக்கத்து முகரம்மாவை சார்ந்த ஷா.'.பி மத்ஹபின் ஹஜ்ரத் அல்லாமா ஹுசைன் பின் சாலிஹா ரஜியல்லாஹுஅன்ஹு நெருங்கினார்கள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் கரத்தை பற்றியவாறு தன்னுடைய வீட்டிற்கு அழைத்துச் சென்றார். அந்த மாபெரிய இமாம் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் நெற்றியில் கையை வைத்தவாறு கூறினார்கள் "நிச்சயமாக, உங்களுடைய நெற்றியில் அல்லாஹ்வினுடைய நூர் இருப்பதை பார்க்கின்றேன்" என்றார். மேலும் சிறிதும் தயக்கமில்லாமல் ஆறு ஹதீஸ்களை தொகுத்தவர் என சான்றிதல் வழங்கி ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அவர்களுக்கு "ஜியாவுத்தீன் (தீனின் பிரகாசமான ஒளியே!)" என்று பட்டமும் கொடுத்தார்கள்.

மதீனத்து உலமாக்களான, ஹனபி மத்ஹபை சார்ந்த முப்தி சைய்யதினா அல்லாமா அப்துர் ரஹ்மான் சிராஜ் மற்றும் முப்தி ஷைக் சையத் அஹமத் தஹலான் ஷாபி ரஜியல்லாஹுஅன்ஹுமா அவர்களாலும் ஆறு ஹதீஸ்களின் தொகுப்பாளர் என சிறப்பிக்கப்பட்டார்கள்.

வரலாற்று சிறப்புமிக்க இந்த புனித ஹஜ் பயணத்தில் சைய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் மக்கா-மதீனா தய்யிபாவைச் சார்ந்த உலமா பெருமக்களிடம்

தப்லீக் ஜமாத்தை சார்ந்த தேவ்பந்த் உலமாக்களின் தவறான கொள்கைகள், நம்பிக்கைகளை பற்றி குற்றம் சாட்டினார். அதற்கு ஆதாரமாக தன்னுடைய புத்தகங்களான “ அல்ஜாமு சுன்னா லி அஹலி பித்னா மற்றும் அல் முதாமதுல் முஸ்தனாத்” என்பதில் அவர்கள் சொல்லியதை, எழுதியதை பட்டியலிட்டு அதற்கு விடையையும் கூறி சமர்ப்பித்தார்கள். இதைக் கவனமாக கண்ணுற்ற மக்கா முகரம்மா மற்றும் மதீனா முனவ்வராவை சார்ந்த உலமாக்கள், ஒரு முக்கியமான பிரபலமான புத்தகமான “ஹிஸ்ஸாமுல் ஹரமைன்” என்பதில் பத்வாக்களை எழுதினார்கள். அதில் அல்லாஹ் மற்றும் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை தரக்குறைவாகவும், கேலியாகவும் பேசியவர்கள், எழுதியவர்களை கடுமையாக கண்டித்தார்கள். அதன் விவரமானது,

**முதல் ஃபத்வா ( மார்க்கத் தீர்ப்பு )**

“அல் முதாமதுல் முஸ்தனாத்” புத்தகத்தில் இடம் பெற்ற தவறான கொள்கைகளின் தவறான தலைவர்கள், மிகக் கெட்ட சாத்தான்களை காட்டிலும் மிக மோசமானவர்கள். இவர்களுடைய கெட்டச் செயல்களால் தரம் கெட்ட மோசமான நம்பிக்கை துரோகிகளாக மாறியுள்ளனர்.”

“கயவர்களை உலகிற்கு வெளிக்காட்டிய இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களுக்கு அல்லாஹ்வின் வெகுமதிகள் கிட்டட்டும், அல்லாஹ் இவர்களின் அரிய வேலைகளை பொருந்தி கொள்ளட்டும் மேலும் மக்களின் மனதில் ஓர் உயர்ந்த இடத்தை கொடுக்கட்டும்.”

“ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் நாவும் அவரது எழுத்துக்களும் கட்டளைகளை கொடுக்கின்றன. ஏனெனில் இறைவன் விரும்புகிறவற்றை முழுவதுமாக பெறக்கூடியவராக இருக்கும் நம்பிக்கையாளராக திகழ்கிறார்கள்.”

*பத்வா வழங்கியவர் – முஹம்மத் சயீத் பின் பாப்ஸீல் ரஜியல்லாஹு தஆலா அன்ஹு, ஷாபி மத்ஹபின் முஃப்தி – மக்கா*

## இரண்டாம் ஃபத்வா ( மார்க்கத் தீர்ப்பு )

“ஓ! படிப்பவர்களே! அல் முதாமதுல் முஸ்தனாத் என்னும் புத்தகம் உங்கள் கைகளில் இருப்பது அவசியம் என நினைக்கிறேன். இந்தப் புத்தகம் உங்களுக்கு மிகச் சிறந்த ஆதாரம் ஆகும். அதிலும் குறிப்பாக வஹாபிசக் கொள்கைகளுக்கு இது ஓர் சிறந்த மறுப்பாகும். வஹாபிகள் யார் என்றால்? நபித்துவத்தை உரிமை கொண்டாடிய “குலாம் அஹமத் காதியானி” மற்றும் மார்கத்திலிருந்து வெளியேறி விட்டு, புனித நபிகளின் கண்ணியத்தையும், மரியாதையையும் கேவலப்படுத்தும் “காசிம் நானோத்வி, ரஷீத் அஹமத் கங்கோஹி, கலீல் அஹமத் அம்பேட்வி, அஷ்ரப் அலி தானவி மற்றும் இவர்களை பின்பற்றுபவர்கள். நிச்சயமாக இவர்கள் பூமியில் குழப்பம் விளைவிப்பவர்கள், இவர்களின் பாதையும் அவ்வாறானதே ஆகும்.”

“இவர்கள் (வஹாபிகள்) எங்கே அராஜகம் செய்கிறார்கள் என்று எடுத்துக்காட்டிய இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களுக்கு அல்லாஹ் சுபச்செய்தி வழங்கட்டும். அல்லாஹ்வின் கருணையும், கிருபையும் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் மீதும், அவரது குடும்பத்தார் மீதும், குழந்தைகள் மீதும் பொழிந்து கியாமத் நாள் வரை உண்மை பேசுபவர்களாகவே இருக்கட்டும்.” ஆமீன்.

*பத்வா வழங்கியவர் – முஹம்மத் பின் அப்துஸ்ஸலாம்*
*தாகிஸ்தானி ரஜியல்லாஹு தஆலா அன்ஹு,*
*முஃப்தி – மதீனத்துல் முனவ்வரா*

## மூன்றாம் ஃபத்வா ( மார்க்கத் தீர்ப்பு )

“அளவற்ற அருளாளன், இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களை எப்பொழுதும் மகிழ்ச்சியாகவும், பாதுகாப்பாகவும் வைக்கட்டும். மார்க்கத்திலிருந்து விலக்கப்பட்ட சாத்தான்களான மிர்சா குலாம் அஹமத் காதியானி, ரஷீத் அஹமத் கங்கோஹி, கலீல் அம்பேட்வி மற்றும் அஷ்ரப் அலி தானவி ஆகியோர் புனித நபிகளார் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமை தரக்குறைவாகவும், பழித்தும், பேசியும், எழுதியும் வருகின்றனர். இவர்கள் காஃபிர்கள்

எனக் கூறுவதில் எந்த வித சந்தேகமும் இல்லை. இந்தச் சாத்தான்களை கா.ஃ.பிர்கள் எனக் கூறுவதிலிருந்து தடுக்கும் அதிகாரமுடையவர்களும் கா.ஃ.பிர்களே!, இவர்களுக்கு மரணத்தண்டனை கொடுக்கப்பட வேண்டும்."

*பத்வா வழங்கியவர் – அல்லாஹ்வின் அடிமை முஹம்மத் பின் ஹம்தான் மஹசரி ரஜியல்லாஹு தஆலா அன்ஹு,*
*மஸ்ஜிதே நபவிய்யின் ஊழியன்*

## இரண்டாம் புனித ஹஜ் பயணம்

இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹு தஆலா அன்ஹு தம்முடைய இரண்டாவது புனித ஹஜ் பயணத்தை ஹிஜ்ரி 1323 (1905)ல் தன்னுடைய 49வது வயதில் நிறைவேற்றினார்கள். துல்ஹாஜ் 25 ம் நாள் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மீண்டும் ஒரு முறை மக்கத்து பெரிய உலமாக்களான ஷைக் சாலிஹா கமால் ரஜியல்லாஹு தஆலா அன்ஹு, அல்லாமா சையத் இஸ்மாயில் ரஜியல்லாஹு தஆலா அன்ஹு மற்றும் பல சூ.ஃ.பி உலமாக்களை சந்திக்கும் வாய்ப்பை பெற்றார்கள். அவர்கள் அனைவரும் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹியின் மீது மரியாதையையும், அன்பையும் பொழிந்தார்கள்.

அச்சமயத்தில் அல்லாமா ஷைக் சாலிஹா கமால் ரஜியல்லாஹு தஆலா அன்ஹு, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடம் மக்கத்து வஹாபி ஆலிம்கள் கேட்கும் மறைவான ஞானங்களை (இல்மே கைப்) பற்றிய 5 கேள்விகளை எடுத்து வைத்தார்கள். மேலும் 2 நாட்களில் அக்கேள்விகளுக்கு பதில் அளிக்குமாறு வேண்டிக்கொண்டார்கள்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் அதற்கடுத்த நாள் கடும் காய்ச்சலால் அவதிப்பட்டார்கள். இருந்த போதிலும் மறைவான ஞானங்களைப் பற்றிய கேள்விகளுக்கு பதிலை அளிக்கும் பொறுப்பை உணர்ந்தவர்களாய், தன்னுடைய பேனாவினை எடுத்து அரபி மொழியில் 400 பக்கங்களை 8 மணி நேரத்தில் எழுதி முடித்தார்கள். தன்னுடைய புத்தகத்திற்கு "அல் தவ்லதுல் மக்கிய்யா பில் மாதத்தில் கைபிய்யா" எனப் பெயரிட்டார்கள்.

கல்வி ஞானத்தில் சிறந்து விளங்கிய மக்கா நகரத்து உலமா பெருமக்கள், ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் தெளிவான பதில்களையும், சரியான நேரத்தில் சொல்லியவாறு செய்ததையும் பார்த்து ஆச்சரியத்துடன் விளிந்து நின்றார்கள். பின்னாளில் ஒருவர் கண்டுப்பிடித்தார், ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி அவர்களின் புத்தகமான "அல் தவ்லதுல் மக்கிய்யா பில் மாதத்தில் கைபிய்யா" ல் உள்ள மொத்த தலைப்புகளில் உள்ள எழுத்துக்களின் கூட்டுத்தொகையானது 1323 ஆகும். இது ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அவர்கள் தமது இரண்டாவது புனித ஹஜ் செய்த அதே ஹிஜ்ரி 1323வது ஆண்டை குறிப்பது ஆச்சரியம் ஆகும்!

## புனித நபிகளார் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முன்னிலையில்

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தம்முடைய இரண்டாவது புனித ஹஜ் பயணத்தில் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் காண வேண்டும் என்ற ஆவல் மிகுந்து எழுந்ததன் காரணமாக தொடர்ச்சியாக தரூதே ஷரீ·ப்பை அழகாகவும், தாழ்மையுடனும் திருநபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மஜ(ச)ார் ஷரீ·ப் முன் ஓதிக் கொண்டிருந்தார்கள். ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமைக் காணுவோம் என்ற நம்பிக்கை ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹிவின் மனதுக்குள் வேரூன்றியது.

அந்த இரவு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள், புனித நபிகளார் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் திருச் சன்னிதானத்தின் முன் தங்கியிருந்த இரண்டாவது இரவாகும். அந்த இரவே ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமை காணும் பொன்னான வாய்ப்பைப் பெற்றார்கள். அந்த இனிய தருணத்தில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் முழு அடிமையானார்கள். பிறகு தன் பேனாவை எடுத்து நபிகளாரின் புகழ்மாலையை (நாத் ஷரீ·ப்) எழுதினார்கள்.

**"வோ சூ எ லா லா ஜார் பிர்தே ஹைன்......"**
(உங்களை சுற்றி ஆயிரம் ஆயிரம் வானவர்கள் திரிகிறார்கள்...)

என்ற முதல்வரியைக் கொண்டு ஆரம்பிக்கும் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி கடைசி வரியை இப்படி எழுதுகிறார்கள்

**"கோயி கியுன் பூச்சே தேரி பாத் ரஜா,
துஜ்சே குத்தே ஹஜார் பிர்தே ஹைன்"**

(உன்னைப் பற்றி யாராவது கேட்டால் ரஜா, உங்களின் நாய்கள் ஆயிரம் திரிந்து கொண்டிருக்கிறது அதுப்போல்......)

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் மதிஞு தய்யிபாவை விட்டு கிளம்பும் நேரத்தில் மீண்டும் ஒருமுறை ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமை காண விரும்பினார்கள். ஆனால் முடியவில்லை, அதனால் கண் கலங்கியவர்களாக தன்னுடைய கவிதையின் கடைசி வரிகளை "உங்களின் நாய்கள் ஆயிரம் திரிந்து கொண்டிருக்கிறது அதுப்போல்......" என எழுதிக்கொண்டிருக்கும் போது புனித நபிகளார் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மஜா(z)ர் ஷரீ.:.ப்புக்கு பின் பக்கமாக நின்று கொண்டு காட்சியளித்தார்கள். இதனைக் கண்ட ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி " ஏய் ரஸா, உன்னுடைய மனது பற்றிய விலாசம் புனித நபிகளாரின் திருச்சன்னிதானத்தில் தெரிய வந்தது, எப்படி அடைந்தாய் என்று மட்டும் கேட்காதே, எப்படி அதை அடைந்தாய் என்று மட்டும் கேட்காதே, உனக்கு அல்லாஹ் போதுமானவனாக இருக்கின்றான். உனக்கு அல்லாஹ் போதுமானவனாக இருக்கின்றான்." என்கிறார்கள்.

## புனித நபிகளார் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மீது நேசம்

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தன்னுடைய வாழ்நாளின் ஒவ்வொரு கணமும் புனித நபிகளார் முஹம்மத் முஸ்தபா ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமை

புகழ்ந்துக் கொண்டிருந்தார்கள். எதைச் செய்தாலும் அல்லாஹ் மற்றும் அவனுடைய ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் திருப்பொருத்தத்திற்காகவே செய்தார்கள்.

ஒருமுறை ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் பரேல்வியில் உள்ள ரஜா மஸ்ஜிதில் இருந்தார்கள். அப்பொழுது ஒரு மஜ்சூப்பை (அல்லாஹ்வின் வலி) சந்திக்க நேர்ந்தார்கள். மஜ்சூப்பான ஹஜ்ரத் தோகா ஷா ரஜியல்லாஹுதஆலாஅன்ஹு, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அவர்களைப் பார்த்து " ஓ! அஹமத் ரஜா! நான் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் ஆற்றலை பூமியில் மட்டும் தான் பார்க்கின்றேன், வானில் இல்லை" என்றார்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அதற்கு பதிலாக "ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் ஆற்றல் வானத்தில் உள்ளது போன்றே பூமியிலும் உள்ளது" என்றார்கள். மஜ்சூப் உடனடியாக "இல்லை, இல்லை என்னால் வானில் அவரது ஆற்றலை பார்க்க முடியவில்லை" என்றார். மீண்டும் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி " நீங்கள் பார்த்தாலும் சரியே, பார்க்காவிட்டாலும் சரியே, ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் ஆற்றல் வானத்திலும் பூமியிலும் உள்ளது." என்றார்கள். உடனே மஜ்சூப் ஆன்மீகக் கோபத்தில் உயர்ந்த குரலில் "போ! அவனை நான் தள்ளி விடுகிறேன்" என்றார்கள்.

அச்சமயம் வீட்டின் மேல்கூரையில் சிறு குழந்தையான மவ்லானா முஸ்தபா ரஜா கான் ரஜியல்லாஹுதஆலாஅன்ஹு விளையாடிக்கொண்டிருந்து கீழே விழுந்து விட்டார்கள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி வீட்டிற்குள் நுழைந்ததும் அவரது தாயார் சொன்னார்கள் " உனக்கு தெரியுமல்லவா? மஜ்சூப்களிடம் விவாதம் செய்வதைக் காட்டிலும் அமைதியாக இருப்பது நல்லதென்று."

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தன்னுடைய மகனை அழைத்து அடிப்பட்டதா? எனக் கேட்டார்கள். இல்லை என்று பதில் வந்ததும், " நான் ஆயிரம் முஸ்தபா ரஸாக்களை ரசூல்

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் சந்தோஷத்திற்காக (ரஜாவுக்காக) தியாகம் செய்ய தயாராக இருக்கின்றேன். ஆனால் ஒரு போதும் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் கண்ணியத்தை குறைக்கும் ஒரு சொல்லையாவது சொல்வதற்கு நான் விட மாட்டேன்.” என்றார்கள்.

சிறிது நேரம் கழித்து அந்த மஜ்சூப், ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி அவர்களிடம் திரும்பி வந்து “ஓ! அஹமத் ரஜா! நீங்கள் தான் வெற்றியாளர்கள், நம்முடைய வாதத்தை சுல்தானுல் ஹிந்த் ஹஜ்ரத் காஜா கரீப் நவாஸ் ரஜியல்லாஹுதஆலாஅன்ஹு அவர்களிடம் கொண்டுச்சென்றேன். அவர் உங்களுக்கு சாதகமாக பதிலளித்தார்கள். அல்ஹம்துலில்லாஹ்! உங்களின் ஆசிர்வாதத்தால் நான் இப்பொழுது “ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் மகிமையை வானத்திலும் கூட பார்க்கின்றேன்.” என்றார்கள்.

ஹஜ்ரத் மவ்லானா நயீமுத்தீன் முராதாபாதி, ஒருமுறை ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி அவர்களிடம் “ ஏன் நீங்கள் சைய்யதினா ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹீ அலைஹி வஸல்லம் அவர்களின் கண்ணியத்தை குறைக்கும் வகையில் நடந்துக் கொள்பவர்களிடம், கடுமையாக நடந்துக் கொள்கிறீர்கள்?” என்று வினவினார். அதற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி “ ஓ! மவ்லானா! நான் அவர்களிடம் கடுமையாக நடந்துக் கொள்கிறேன், அவர்கள் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கண்ணியத்தையும், மரியாதையையும் கெடுப்பதற்கு பதிலாக என்னை அவர்கள் இலக்காக்கி கொள்ளட்டும். அதைப்பற்றி நான் கவலைப் பட போவதில்லை. என்னை வேண்டுமானால் அவர்கள் தூற்றிக்கொள்ளட்டும். ஆனால் என்னுடைய அன்பிற்குரிய தலைவரான ஜனாபே முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், வஹாபிகள் சொல்லும் அனைத்து பாவங்களிலிருந்தும் விடுபட்டவர்கள் - தூய்மையானவர்கள்.” என்றார்கள்.

Dr.கர்ரர் ஹுசைன், துணைவேந்தர் - பலுசிஸ்தான் பல்கலைக்கழகம். கூறுகையில் “ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி

அலைஹி, நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மீது காட்டிய அன்பும் மரியாதையையும் பார்க்கும் போது, அந்த அன்பு இல்லாவிடில் இஸ்லாம் என்பது உயிரற்ற உடலைப் போன்றதாகும் எனத் தெரிகிறது. உயிர் என்பதே ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மீது காட்டும் அன்பும் மரியாதையும் தான் ஆகும்.'' என்கிறார்.

## சைய்யதுமார்களை நேசித்தல்

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வழித்தோன்றல்களான சைய்யதுமார்களை எவ்வாறு நேசித்து மரியாதை செய்ய வேண்டும் என உலக முஸ்லிம்களுக்கு இச்சம்பவம் மூலம் கூறுகிறார்கள்.

ஒரு நாள் இமாம் அஹ்மத் ரஜா கான் ரஜியல்லாஹு தஆலா அன்ஹு ஒருவரின் அழைப்பினை ஏற்று அவரின் வீட்டிற்கு பல்லாக்கில் சென்றுக் கொண்டிருந்தார்கள். திடீரென்று சைய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி பல்லாக்கை நிறுத்த சொன்னார்கள் மேலும் பல்லாக்கு தூக்குபவர்களை நோக்கி '' நான் உங்களில் ஒருவரிடமிருந்து சைய்யதினுடைய வாசனையை நுகர்கின்றேன். யார் உங்களில் சைய்யத் பரம்பரையை சார்ந்தவர்கள்?'' என்று கூறியவாறு பல்லாக்கிலிருந்து வெளியே வந்தார்கள்.

அந்த பல்லாக்கு தூக்குபவர்களில் ஒருவர் தான் சைய்யத் என்று தயங்கியவாறே கூறினார். உடனேயே எல்லா கல்வி ஞானங்களிலும் மேன்மையான ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி சைய்யதுமார்களின் நிலைமையைக் கண்டு கண்களில் கண்ணீர் சிந்தியவாறு அந்த சைய்யது நபரின் கால்களைப் பற்றி, தன்னை மன்னிக்குமாறு தாழ்மையுடன் வேண்டிக்கொண்டார்கள். நாளை கியாமத் நாளில் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் என்னைப் பார்த்து, அவர்களின் புனித பரம்பரையை கேவலப்படுத்திவிட்டாய் என கூறினால் நான் என்ன செய்வேன் என்று துடித்தார்கள்.

சைய்யதுமாரான அந்த பல்லாக்கு தூக்குபவர் ஹஜ்ரத் அவர்களை மன்னித்து விட்டார்கள் இருந்தபோதிலும் ஆஷிகே ரசூல் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, அந்த சைய்யதுமாரை அதே பல்லாக்கில் உட்கார வைத்து தன்னுடைய புனிதமான தோள்களில் அந்த பல்லாக்கை சுமந்துக் கொண்டு சென்றார்கள். அல்லாஹு அக்பர்!

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அந்த பல்லாக்கு தூக்குபவரை சாதாரண மனிதனாக கருதாமல், புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பரம்பரையை சார்ந்தவர்கள் எனக் கருதி கொடுத்த மரியாதையும், அன்பும் பார்ப்பவர்களை வியப்பில் ஆழ்த்தியது!

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களது அறையின் பக்கத்தில் ஒரு சைய்யத் பரம்பரையை சேர்ந்த ஒரு சிறுவன் விளையாடுவான். அச்சிறுவன் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் அறையை கடக்க நேரிட்டால், உடனேயே ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மரியாதை நிமிர்த்தம் காரணமாக எழுந்து நின்று விடுவார்கள். அச்சிறுவன் ஒரு நாளைக்கு 10 முறை கடக்க நேரிடின், ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களும் 10 முறை எழுந்து நின்று மரியாதை செலுத்துவார்கள்.

## <u>சுன்னத்துகளைப் பின்பற்றுதல்</u>

இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹுதஆலா அன்ஹு, ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சுன்னத்களைப் பின்பற்றுவதில் மிக்க ஆர்வமாக இருப்பார்கள். பின் வரும் சம்பவங்களிலிருந்து ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி சுன்னத்துகளின் மீது வைத்திருந்த நம்பிக்கைகளை நாம் அடையாளம் கண்டுக் கொள்ளலாம்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தனக்கு நேர்ந்த சம்பவத்தை தானே கூறலானார்கள் “ பரேல்வியில் ஒரு முறை பிளேக் நோய் பரவியுள்ளதாக வதந்தி கிளம்பியது, அச்சமயத்தில்

எனது ஈறுகளில் ஒரு வகையான மாற்றங்கள் ஏற்பட்டு மிக்க வலியை ஏற்படுத்தியது, மிக்க வலியின் காரணமாக என்னால் வாயைத் திறக்க கூட முடியவில்லை, அதனுடன் சேர்ந்து காய்ச்சலும் வந்துவிட்டது. என் உடல்நிலை மிக மோசமானது! டாக்டர் வந்து சில மணித்துளிகள் என்னை கூர்ந்து கவனித்து பிளேக் நோயால் அவதியுறுகிறேன் என்று கூறினார். என்னால் அப்போது பேச முடியவில்லை இல்லையென்றால் டாக்டரின் கணிப்பு தவறு என்று கூறியிருப்பேன்.

ஏனென்றால் எனக்கு மிகப்பெரிய வியாதிகள் எதுவும் வராது என்று தெரியும், எப்படியெனில் நான் ஏற்கனவே ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னபடி கொடிய மற்றும் தீவிர நோய்களிலிருந்து காப்பாற்றும் இந்த துஆவை "***அல்ஹம்து லில்லாஹில் லஜி ஆ.்.பினி மிம் மப்திலக பிஹி வ .்.பத் தல்னி அலா கதீரம் மிமம் கலக த.்.ப்தீலன்***" ஓதிக்கொண்டேன். அதனால் எனக்கு பிளேக் நோய் போன்ற கொடிய நோய்கள் வராது என்ற நம்பிக்கை இருந்தது.

சிறிது நேரத்தில் மிகுந்த மரியாதையுடன் நான் சற்று சத்தமாக " யா அல்லாஹ்! உனது பிரியமான ஹபீப் ரசூலே கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாக்கை உண்மையாக்கு! டாக்டரின் கணிப்பை பொய்யாக்கு"என்று மன்றாடினேன். அப்பொழுது எனது வலது பக்கத்திலிருந்து ஒரு சத்தத்தைக் கேட்டேன் அதில் மிஸ்வாக் மற்றும் கருமிளகை பயன்படுத்துமாறு அறிவுறைப்படுத்தப்பட்டது! உடனேயே சிறிது கஷ்டத்துடன் எழுந்து மிஸ்வாக்கை கொண்டு பல் துலக்கினேன், கருமிளகை மாத்திரையைப் போல் என் நாவில் வைத்திருந்தேன். சிறிது நேரத்தில் அல்லாஹ்வின் மகிமையால் நான் குணம் அடைந்தேன். எனது பலத்தையும் பெற்றேன். டாக்டரின் கணிப்பு தவறானது அடிப்படையே இல்லாதது என்று சொல்லி அனுப்பினேன்." என்றார்கள்.

மவ்லானா முஹம்மத் ஷரீ.்.ப் என்பவர் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அல்லாஹ் மற்றும் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது வைத்திருக்கும்

நம்பிக்கையை குறிப்பிடும் சம்பவத்தை பின்வருமாறு கூறுகிறார்கள், "ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவரது தந்தையுடன் ஹஜ்ஜை முடித்துக் கொண்டு கப்பலில் வரும் போது ஒரு புயல் உருவானது. கப்பலின் கேப்டன் புயலின் வேகத்தை பற்றியும் அதனால் உயிர்ப்பிழைப்பது கடினம் என்பதையும் கப்பலில் உள்ளவர்களுக்கு எச்சரிக்கையூட்டி பாதுகாப்பு கலன்களை உடுத்திக் கொள்ளுமாறு கூறிக் கொண்டிருந்தார். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தம் தந்தை கவலையுடன் இருப்பதை நோக்கினார். அவரது தந்தை கூறினார் "எனது கவலை எல்லாம் உன்னைப் பற்றியதுதான்" என்றார்கள். அதற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி " தந்தையே! கேப்டன் நம்மை கைவிட்டாலும் அல்லாஹ் நம்மை காப்பாற்றுவான்". ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறியுள்ளார்கள் யார் இந்த துஆவை " ***சுப்ஹானல் லஜி(Z) சக்கர லனா ஹாஜா(Z) வமா குன்னா லஹு முக்ரியீன் வ இன்னா இலா ரப்பினா ல முன் கலிபூ(B)ன்"*** பயணத்தின் போது ஓதிக்கொள்கிறார்களோ, அவர்கள் எப்பேற்பட்ட விபத்துகளிலிருந்தும் தப்பித்துக் கொள்வார்கள்.

"எனவே நான் இந்த துஆவை கப்பலில் நுழையும் போதே கூறிவிட்டேன்" என்றார்கள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி இவ்வாறு கூறிக்கொண்டிருக்கும் போதே கேப்டன் மிக சந்தோஷமாக வந்து புயலின் திசை மாறிவிட்டது என்று மகிழ்ச்சி பொங்க பயணிகளிடம் தெரிவித்தார். மேலும் பயணிகள் யாரும் கவலைப்பட தேவையில்லை, கப்பலிற்கு எந்த வித ஆபத்துமில்லை என்றார்.

## கௌது நாயகம் ஷைக் அப்துல் காதிர் ஜீலானி ரஜியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் மீது நேசம்

இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹுதஆலா அன்ஹு, சைய்யதினா கௌதுல் ஆஜம் ஹஜ்ரத் ஷைக் அப்துல் காதிர் ஜீலானி ரஜியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களின் மீது

அளவில்லா அன்பும் மரியாதையும் வைத்திருந்தார்கள். ஹஜ்ரத் முஹத்திஸே ஆஜம் ஹிந்த் ரஜியல்லாஹு"தஆலா அன்ஹு" கூறுகிறார்கள் “நான் தாருல் இ.்.ப்தா பரேல்வி ஷரீ.்.ப்பில் இருக்கும் போது ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி 11 ரூபாய்க்கு மதிப்பான இனிப்பு பண்டங்களை வாங்கி வந்து சைய்யதினா கௌதுல் ஆஜம் ரஜியல்லாஹு"தஆலா அன்ஹு" அவர்களின் மீது பாத்திஹா ஓதி, இனிப்பு பண்டங்களை பகிர்ந்து கொடுக்க சொன்னார்கள்.

திடீரென்று ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மண்டியிட்டு தஷாஹு"த் நிலையில் இருந்தார்கள். அருகில் சென்று பார்த்தப் போது ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தன்னுடைய ஆசிர்வதிக்கப்பட்ட நாவின் நுனியால், சிந்திய சில பாத்திஹா தப்ரூக்கை (பிரசாதத்தை) எடுத்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி, சைய்யதினா கௌதுல் ஆஜம் ஹஜ்ரத் ஷைக் அப்துல் காதிர் ஜீலானி ரஜியல்லாஹு"தஆலா அன்ஹு" அவர்களின் மீது நிறைய புகழ் பாமாலைகளை எழுதியுள்ளார்கள்.

## உலக வாழ்க்கையில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி சில ஏக்கர் நிலங்களுக்கு உரிமையாளராக இருந்தார்கள். அதனுடைய முழு பொறுப்பையும் நம்பிக்கைக்கு உரியவர்களிடம் ஒப்படைத்து விட்டு சில மாத வாடகைகளை மட்டும் பெற்று வந்தார்கள். அந்த மாத வாடகையை சைய்யதுமார்களுக்கு விருந்து வழங்கவும், புத்தகங்களை வாங்கவும் செலவு செய்து விடுவார்கள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தன்னுடைய பாக்கெட்களில் ஒரு சில நாணயங்களையே வைத்திருப்பார்கள். அவர் எப்பொழுதும் தமக்கு சொந்தமான நிலங்களிலிருந்து வரும் வருமானம் பற்றி விசாரித்தது கூட கிடையாது. **ஆதாரம் (அல் மீசான் - பக்கம் 335)**

இந்தியாவில் கிலா.ஃ.பத் இயக்கம் நடந்து கொண்டிருந்த வேளையில் காந்தி, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை காண விரும்பினார். காந்தி கூறுகையில், ''இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹுதஆலா அன்ஹு மக்களிடத்தில் நல்ல செல்வாக்கை பெற்றிருக்கிறார். அதனால் அவரிடம் சொல்லுங்கள், மக்களை கிலா.ஃ.பத் இயக்கத்தில் பங்கு பெற உதவி செய்ய சொல்லுங்கள்'' என்றார்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ''எதைப் பற்றி காந்தி என்னிடம் பேசுவார்? மார்க்கத்தைப் பற்றியா? உலகத்தைப் பற்றியா? உலக சம்பந்தமான விஷயமாக இருந்தால், நான் பங்கு பெற்று என்ன செய்வேன்? நான் உலக விஷயங்களில் ஆர்வமில்லாமல் இருக்கிறேன். அதனால் காந்தியை சந்திப்பதில் ஆர்வம் இல்லை'' என்றார்கள். **ஆதாரம் (அல் மீசான் - பக்கம் 335)**

## <u>14 ஆம் நூற்றாண்டின் முஜத்தித்</u>

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தனது காலத்தின் கௌதாக, இமாமாக (அபு ஹனி.ஃ.பா ரஜியல்லாஹுதஆலா அன்ஹு) ஆக திகழ்ந்தார்கள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மிகச் சிறந்த அல்லாஹ்வின் வலியாகவும் (இறை நேசர்) திகழ்ந்தார்கள். தன்னுடைய வாழ்க்கையில் ஒவ்வொரு செயலிலும் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தீனை புத்துயிர் ஊட்டியதால் முஜத்திதே இஸ்லாம் (இஸ்லாத்திற்கு உயிரூட்டியவர்) என்று அழைக்கப்பட்டார்கள்.

பல கடவுள் நம்பிக்கை, கு.ஃ.ப்ர், ஷிர்க், பித்அத் போன்ற கரிய மேகங்களால் உலகம் சூழப்பட்டது. முஸ்லிம்கள் குழம்பியவாறு நிலைகுலைந்து போன வேளையில் அல்லாஹ் மற்றும் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கிருபையால் காரிருளை அகற்றும் சூரியனாக 14 ஆம் நூற்றாண்டில் இமாமே அஹ்லே சுன்னத், இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹுதஆலா அன்ஹு தன்னுடைய தெளிவான ஆதாரங்களால் கு.ஃ.ப்ரை ஒழித்து இஸ்லாத்திற்கு புத்துயிர் ஊட்டினார்கள்.

சைய்யதினா அபுஹுரைரா ரஜியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களால் கிடைக்கப் பெற்ற மிஷ்காத் ஷரீ.்.ப் பில் உள்ள ஹதீஸ், முஜத்தித் பற்றி கூறுவதை பார்ப்போம்.

“நிச்சயமாக ஒவ்வொரு நூற்றாண்டின் முடிவிலும் பேரருளாளனான அல்லாஹ்வால் ஒரு மனிதன், உம்மத்திற்காக அனுப்பி வைக்கப்படுவார். வருபவர் தீனிற்கு உயிரூட்டுபவராக இருப்பார்.” பொய்யான மாற்றங்களை இஸ்லாத்தில் புகுத்தி குழப்பம் ஏற்படுத்தும் அறியாமைக் காலத்தில் தீனே முஹம்மதி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கொடியை கையில் நேர்மையாக, தைரியமாக பிடித்து சுன்னத் மற்றும் பித்அத் ஆகியவற்றின் வேற்றுமைகளை பிரித்துக் காட்டி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் உம்மத்துக்களை வழி நடத்திச் செல்பவரே முஜத்தித் (உயிரூட்டுபவர்) என்றழைக்கப்படுவார்.

முஜத்தித் என்பவர் ஒரு நூற்றாண்டின் இறுதியிலோ அல்லது ஆரம்பத்திலோ வரலாம். நூறு ஆண்டுகளுக்கு ஒரு முறை வரக் காரணம் என்னவெனில் நூற்றாண்டு காலத்தில் மக்களுடைய எண்ணங்கள், சுற்றுப்புறம், அறியாமை ஆகியவற்றில் பலத்த மாற்றங்கள் ஏற்படுகிறது. இதனால் வழி தவறி நடக்க ஆரம்பிக்கின்றனர்.

முஜத்தித் என்ற சொல் பன்மையை குறிப்பதால் ஒரு நூற்றாண்டில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட முஜத்தித்கள் வருகின்றனர். இவர்கள் தான் முஜத்தித் என்று அவரது சொல், செயல், வாழ்க்கை ஆகியவற்றை பார்த்து சான்றோர்களால் உறுதிச் செய்யப்படுகிறது.

## முதல் நூற்றாண்டிலிருந்து அறியப்பட்ட முஜத்தித்களின் பட்டியல்

**முதல் நூற்றாண்டு**

1. சையதினா இமாம் உமர் பின் அப்துல் அஜிஸ் ரஜியல்லாஹு அன்ஹு.

**2ம் நூற்றாண்டு**

1. இமாம் ஹசன் பஸ்ரி,
2. இமாம் முஹம்மத் பின் ஹஸ்ஸன் ஷைபானி,
3. இமாம் மாலிக் பின் அனஸ்,
4. இமாம் அப்துல்லா பின் இத்ரீஸ் ஷா.ஃ.பி ரஜியல்லாஹு அன்ஹும்

**3ம் நூற்றாண்டு**

1. இமாம் அபுல் ஹசன் பின் உமர்,
2. இமாம் அஹமத் பின் ஹம்பல் ரஜியல்லாஹு அன்ஹுமா.

**4ம் நூற்றாண்டு**

1. இமாம் தஹதாவி,
2. இமாம் இஸ்மாயீல் பின் ஹாமித் ஜா.ஃ.பரி,
3. இமாம் அபு ஜா.ஃ.பர் பின் ஜரீர் திப்ரி,
4. இமாம் அபு ஹாதிம் ராஸி ரஜியல்லாஹு அன்ஹும்

**5ம் நூற்றாண்டு**

1. இமாம் அபு நயீம் இஸ்.ஃ.பஹானி,
2. இமாம் அபுல் ஹுசைன் அஹமத் பின் முஹம்மத் அபி பக்ரியில் காதிர்,
3. இமாம் ஹுசைன் பின் ராகிப்,
4. இமாம் முஹம்மத் பின் முஹம்மத் கஸ்ஸாலி ரஜியல்லாஹு அன்ஹும்.

**6ம் நூற்றாண்டு**

1. இமாம் அபுல் பஸல் உமர் ராஸி,
2. அல்லாமா இமாம் உமர் நஸ்.ஃ.பி,
3. இமாம் காஜி பக்ருத்தீன் ஹஸன் மன்சூர்,
4. இமாம் அபு முஹம்மத் ஹுசைன் பின் மசூத் பராரா ரஜியல்லாஹு அன்ஹும்.

**7ம் நூற்றாண்டு**

1. அல்லாமா இமாம் அபுல் பஸ்லி ஜமாலுத்தீன் முஹம்மத் பின் ஆப்ரிகி மிஸ்ரி,

2. இமாம் ஷைக் ஷஹாபுத்தீன் சுஹரவர்தி,
3. காஜா முஹியத்தீன் சிஸ்தி அஜ்மீரி,
4. இமாம் அபுல் ஹசன் உஜ்ஜுத்தீன் அலி பின் முஹம்மத் இப்ன் அதீர்,
5. இமாம் ஷேக் அக்பர் முஹியத்தீன் முஹம்மத் இப்னு அரபி ரஜியல்லாஹு அன்ஹும்.

## 8ம் நூற்றாண்டு

1. இமாம் தாஜுத்தீன் பின் அதாஉல்லா சிகந்தரி,
2. காஜா நிஜாமுத்தீன் அவ்லியா மஹபூபே இலாஹி,
3. இமாம் உமர் பின் மசூத் த.்.ப்தஸானி ரஜியல்லாஹு அன்ஹும்

## 9ம் நூற்றாண்டு

1. இமாம் ஹாபிஸ் ஜலாலுத்தீன் அபுபக்கர் அப்துர் ரஹமான் சுயூதி,
2. இமாம் நூருத்தீன் பின் அஹமத் மிஸ்ரி,
3. இமாம் முஹம்மத் பின் யூசுப் கர்மனி,
4. இமாம் ஷம்சுதீன் அப்துல் கைர் முஹம்மத் பின் அப்துர் ரஹமான் சாக்வி,
5. அல்லாமா இமாம் சய்யத் ஷரீ.்.ப் அலி பின் முஹம்மத் ஜர்மானி ரஜியல்லாஹு அன்ஹும்.

## 10ம் நூற்றாண்டு

1. இமாம் ஷஹாபுத்தீன் அபு பக்ர் அஹமத் பின் முஹம்மத் காதிப் கிஸ்தலானி,
2. இமாம் முஹம்மத் ஷர்பினி,
3. அல்லாமா ஷைக் முஹம்மத் தாஹிர் முஹத்தித் ரஜியல்லாஹு அன்ஹும்.

## 11ம் நூற்றாண்டு

1. இமாம் அலி பின் சுல்தான் காரி,
2. இமாம் ஷேக் அஹமத் சர் ஹிந்தி முஜத்திதே அல்ப் தானி,
3. சுல்தானுல் ஆரி.்.பீன் இமாம் முஹம்மத் பாஹீ ரஜியல்லாஹு அன்ஹும்.

**12ம் நூற்றாண்டு**

1. அல்லாமா மவ்லானா இமாம் அபுல் ஹஸன் முஹம்மத் பின் அப்துல் ஹாதி சிந்தி,
2. இமாம் அப்துல் கனி தாப்லிஸி,
3. ஷைக் அஹமத் முல்லா ஜிவன் ரஜியல்லாஹு அன்ஹுமா.

**13ம் நூற்றாண்டு**

1. இமாம் அப்துல் அலி லக்னோவி,
2. இமாம் ஷேக் அஹமத் சாதி மாலிகி,
3. அல்லாமா இமாம் அஹமத் பின் இஸ்மாயீல் தஹ்தாவி(Tahtaawi),
4. அல்லாமா ஷா அப்துல் அஜிஸ் முஜத்திதே தெஹ்லவி ரஜியல்லாஹு அன்ஹுமா.

**<u>14ம் நூற்றாண்டு</u>**

1. இமாமே அஹ்லே சுன்னத், கா (Qa)மியே பித்அத், முஜத்திதே ஆஜம், ஆலா ஹஜ்ரத், அஷ் ஷா இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹு அன்ஹு.

## <u>மக்கா முகர்ரமா உலமாக்களால் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹிக்கு வழங்கப்பட்ட பட்ட பெயர்கள்</u>

1. உலமாக்களின் கண்களுக்கு குளிர்ச்சியானவர்.
2. அன்பிற்குரியவர் அல்லாஹ்வினால் ஏற்றுக் கொள்ளப்பட்ட அடிமைகளில் ஒருவர்.
3. மிகச்சிறந்த இஸ்லாமிய ஆராய்ச்சியாளர்களின் முத்திரை.
4. உலமாக்களை வழி நடத்திச் செல்லும் தலைவர்.
5. இந்த நூற்றாண்டின் முஜத்தித்.

**ஆதாரம்- அல்பவுசதுல் மக்கிய்யா,**

**ஹிஸ்ஸாமுல் ஹரமைன்,அத்தவுலதுல் மக்கிய்யா.**

## மதீனா முனவ்வரா உலமாக்களால் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹிக்கு வழங்கப்பட்ட பட்ட பெயர்கள்

1. இமாம்களின் தலைவர்.
2. மறைவான ஞானத்தை (இல்மே கைப்) அறியும் தலைவர்.
3. முன்னாள் சென்ற மற்றும் வரக் கூடிய உலமாக்களின் பெருமிதம்.
4. இந்த உம்மத்தின் முஜத்தித்.
5. இஸ்லாமிய நீதி வழங்கும் நீதிபதிகளுக்கெல்லாம் நீதிபதி.
6. ஹதீது ஆராய்ச்சியாளர்களுக்கெல்லாம் தலைவர்.
7. பித்அத்தை ஒழித்து, சுன்னத்தை பற்றிக் கொள்பவர்.
8. இந்த நூற்றாண்டின் முஜத்தித்.

**ஆதாரம்- அல்பவுசதுல் மக்கிய்யா,**

**ஹிஸ்ஸாமுல் ஹரமைன், அத்தவுலதுல் மக்கிய்யா.**

## ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் ஜிஹாத்(போராட்டம்)

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கண்ணியத்தையும், மரியாதையையும் குறைக்கும் வகையில் செயல்படுவோர்க்கு எதிராக ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தனது வாழ்நாள் முழுவதும் ஜிஹாத் செய்தார்கள்.

நீதிபதி அல்லாமா மு.ஃப்தி சைய்யத் சுஜாத் அலி காதிரி ரஜியல்லாஹு அன்ஹு ( ஷரிஅத் கோர்ட், பாகிஸ்தான் அரசு) ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி பற்றிக் கூறுகையில், “ அவர் ஆன்மீகத்தில் அஹமத் பின் ஹம்பால் மற்றும் ஷைக் அப்துல் காதிர் ஜீலானி ரஜியல்லாஹு அன்ஹுமா போன்றவர். அவர் இமாம் அபு ஹனீ.ஃபா மற்றும் இமாம் அபு யூசுப் ரஜியல்லாஹு அன்ஹுமா போன்று உள்நோக்கு பார்வையைக் கொண்டவர். அவர் சொன்ன தத்துவமெல்லாம் இமாம் ராஸி மற்றும் இமாம் கஸ்ஸாலி ரஜியல்லாஹு அன்ஹுமா போன்றோரின் தத்துவமாகும். தைரியமான முஜத்தித் அல.ஃப் தானி ரஜியல்லாஹு அன்ஹு

போன்றும், உண்மையை நிலைநாட்டுவதில் மன்சூர் ஹல்லாஜ் ரஜியல்லாஹு அன்ஹு போன்றவராவார். நம்பிக்கை இல்லாதோரை சகித்துக் கொள்ளமாட்டார். அல்லாஹ்வின் அடிமைகளுக்கு அன்பும், கருணையும் செலுத்துபவர் மற்றும் புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமை நேசிப்பவர்.'' எனக் கூறுகிறார்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, வஹாபிகளான இஸ்லாமிய துரோகிகளிடம் பலமுறை தனியாகச் சென்று அவர்களுடைய கு.ஃ.ப்ரான எண்ணங்களுக்கும், சொற்களுக்கும், எழுத்துக்களுக்கும் விளக்கம் கூறி தவ்பா (மன்னிப்பு கோருதல்) செய்யுமாறு கூறினார். ஆனால் அந்த வழிகெட்டவர்கள் தங்களுடைய கு.ஃ.ப்ரான செயல்களுக்கு சற்றும் மனவருந்தாமல் மேலும் மேலும் கு.ஃ.ப்ரான காரியங்களை செய்து கொண்டிருந்தமையால், இஸ்லாத்தை காப்பாற்றும் நோக்கில் பத்வாயே தக்.ஃ.பீர் என்னும் கு.ஃ.ப்ர் பத்வாயை வஹாபிகள் மீது இட்டார்கள். இதில் அஷ்ரப் அலி தானவி, ரஷீத் அஹமத் கங்கோஹி, கலீல் அஹமத் அம்பேட்வி போன்ற தப்லீக் ஜமாத்தை சேர்ந்தவர்களும் மற்றும் பலரும் ஆளாயினர்.

இந்த கா.ஃ.பிர்களின் (வஹாபிகளின்) கொண்டிருந்த கெட்ட கொள்கை கருத்துக்களுக்கு ஆதாரமாக ஒரு சில மாதிரிகளை பார்ப்போம்.

1. "மறைவான ஞானம் என்பது அறிவின் ஒரு பகுதிதான், நபிகள் (ஸல்) கொண்டிருக்கும் மறைவான ஞானத்தில் என்ன சிறப்பு இருக்கிறது? இந்த மாதிரி ஞானத்தை ஆடு, மாடு, கழுதை, சிறு குழந்தைகள், ஏன் பைத்தியக்காரர்கள் மற்றும் எல்லா விலங்குகளும் பெற்றிருக்கின்றன."

    - ஹிப்சுல் ஈமான் ( மசாஹிருல் பதிப்பகம்), பக்கம் 6
    - ஆசிரியர் – அஷ்ரப் அலி தானவி

2. "நபிமார்கள் அனைவரும் உம்மத்துக்களை காட்டிலும் அறிவில் மட்டும் சிறந்தவர்கள். நல்ல செயல்களில் சில

சமயம் உம்மத்துக்கள் நபிமார்களுக்கு சமமாகவும், சில சமயங்களில் நபிமார்களை விட சிறந்தும் விளங்குவார்கள்.''

- தஹ்ஜீருன் நாஸ், பக்கம் 5,
- பதிப்பகம் - மக்தபா பைஜ் நஜ்த் ஜாமி மஸ்ஜித், தேவ்பந்த். உ.பி.
- ஆசிரியர் – காசிம் நானோத்வி

3. ''ரஹ்மத்துல்-லில்-ஆலமீன் என்ற வார்த்தையானது, ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மட்டும் சிறப்பாக குறிப்பது அல்ல. மற்ற நபிமார்களுக்கும், ஞானிகளுக்கும், உலமாக்களுக்கும், இன்னும் வரக்கூடியவர்களுக்கும் பொருந்தும்.''

- பத்வாயே ரஷீதியா, பாகம் 2, பக்கம் 12,
- பதிப்பகம் - மக்தபா ரஷீதியா ஜாமி மஸ்ஜித், டெல்லி.

மேலும் வஹாபிகளின் புத்தகங்களை படிக்கும் போது இன்னும் கேவலமான வார்த்தைகளாலும், கொள்கைகளாலும் ஈமானிற்கு எப்பேற்பட்ட நாசத்தை செய்கிறார்கள் என்பது தெரியவரும்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் இப்பேற்பட்ட வஹாபிகளின் ஈமான் கெட்ட கொள்கைகளிலிருந்து உலக முஸ்லிம்கள் தற்காத்துக் கொள்ள வேண்டும் எனவும், வஹாபிகளான இவர்களை பின் தொடர்பவர்களிலிருந்து ஈமானை பாதுகாத்து கொள்ளும் படி எச்சரிக்கின்றார்கள்.
(குறிப்பு - தப்லீக் ஜமாத், ஜமாத்தே இஸ்லாமி ஹிந்த்- பீஸ், தமுமுக, தநாதஜ, பபிஆஇ, காதியானி, மநேமக, இன்னும் பல கூட்டங்கள் வஹாபிகளின் கொள்கைகளை முழுக்க முழுக்க பின் தொடருபவர்கள்)

## ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் ஒப்பற்ற அறிவு

ஒரு முறை ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் பிலிபிட் ஷரீ∴பில் தங்க நேர்ந்தது. அப்போது "உகூதுல் அர்யா" (Uqoodul Arya) என்ற புத்தகத்தை படிப்பதற்கு வாங்கினார்கள். புத்தகத்தை படிப்பதற்கு கொடுத்தவர் ஒரே ஒரு புத்தகமாக இருப்பதால் மீண்டும் திருப்பி தருமாறும், ∴பத்வாக்களை வழங்குவதற்கு இந்தப் புத்தகம்தான் ஆதாரமாக பயன்படுகிறது என்றும் கூறினார்.

அன்று இரவே கிளம்ப வேண்டிய ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஒருவரின் அழைப்பை ஏற்று மற்றொரு இரவு தங்க நேர்ந்தது. அந்த இரவில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி முழுப் புத்தகத்தையும் படித்து முடித்தார்கள். அடுத்த நாள் காலையில் இரயில் நிலையத்திற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி புறப்பட்டு கொண்டிருந்தார்கள்.

முஹத்திஸே சூரத் ரஜியல்லாஹு அன்ஹு, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹியிடம் தயங்கியவாறே புத்தகத்தை திருப்பித் தருமாறு கேட்டார்கள். அதற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி சிரித்துக் கொண்டே தான் படித்து முடித்ததாகவும், இனி தன்னுடன் எடுத்து செல்வதற்கு தேவையுமில்லை என்றார்கள்.

இதைக் கேட்டவுடன் முஹத்திஸே சூரத் ரஜியல்லாஹு அன்ஹு ஆச்சரியத்துடன், பல பாகங்களைக் கொண்ட புத்தகத்தை ஒரு இரவில் எப்படி படித்தீர்கள்? என்றார். "இன்ஷா அல்லாஹ், அடுத்த 3 மாதத்திற்கு இந்தப் புத்தகத்தில் இருக்கும் வாக்கியங்களை மறக்க மாட்டேன். இன்ஷா அல்லாஹ், இந்தப் புத்தகத்தின் கருத்துக்களை என் வாழ்நாள் முழுவதும் மறக்க மாட்டேன். இந்தப் புத்தகத்தில் உள்ளடக்கம் பற்றிய உரை இல்லாமல் இருந்தது, அதை நான் உங்களுக்காக தயார்படுத்தியிருக்கிறேன்" என பதிலளித்தார் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி.

## ஹா.்.பிசுல் குர்ஆன் ஷரீ.்.ப்

ஒருவர் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுக்கு கடிதம் எழுதியதில் தாங்கள் ஹா.்.பிஸ் இல்லையே எனக் குறிப்பிட்டு இருந்தார். அதைக் கண்ட ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மனம் வருந்தினார், ஹா.்.பிஸாக வேண்டும் என்று முடிவு செய்தார்கள்.

ஒலுச் செய்துவிட்டு ஜமாத் கூடும் வரை இருக்கும் நேரத்தில் ஹஜ்ரத் அல்லாமா சதுர்ஷ் ஷரியத் ரஜியல்லாஹு அன்ஹு மனப்பாடமாக ஒரு சிபாரா (ஜீஸ்) ஓத, ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி கவனமுடன் கேட்பார்கள். பிறகு ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி கவனமுடன் கேட்டதை மனதில் நிறுத்தி தராவிஹ் தொழுகையில் இமாமத் செய்வார்கள். இப்படியே 30 நாட்கள் நடந்தது. ரம்ஜான் மாத இறுதி நாளில் சைய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஹா.்.பிசுல் குர்ஆன் ஆக மாறினார்கள்!

## ஆசிர்வதிக்கப்பட்ட குணநலன்கள்

### <u>அன்பு செலுத்துவதும் அல்லாஹ்விற்காக!<br>கோபப்படுவதும் அல்லாஹ்விற்காக!</u>

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி உள் ஒன்று, புறம் ஒன்று இல்லாமல் எப்பொழுதும் ஒரே மாதிரியாகத்தான் இருப்பார்கள். ஷரிஅத்தே முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் என வரும் போது, எந்த நேரத்திலும் ஷரிஅத்திற்கு எதிராக ஒரு வார்த்தை கூட சொல்ல மாட்டார்கள்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, நல்ல முஸ்லிமின் மனம் புண்படுத்தும் படி நடந்து கொண்டதில்லை. வறியவர்கள் மீதும், அனாதைகள் மீதும் அளப்பறிய அன்பை பொழிந்தார்கள். ஒரு ஏழை குடும்பத்தை சார்ந்தவர், ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை தன் வீட்டிற்கு அழைத்தார். ஜப்ருத்தீன் பீஹாரி ரஜியல்லாஹீஅன்ஹீவும் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுடன் சென்றார்கள்.

அழைப்பு விடுத்த அந்த நபர் தனது வறுமையின் கோரப்பிடியிலும் சில ரொட்டித்துண்டுகளையும், சிறிது மாட்டு இறைச்சியையும் சாப்பிடுவதற்கு வைத்தார்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹிவின் உடம்பிற்கு மாட்டிறைச்சி ஒத்துக்கொள்ளாது என்ற போதிலும் ஏழையின் சந்தோஷத்திற்காக துஆவை ஓதி சாப்பிட்டார்கள். அந்த துஆவை ஓதினால், சாப்பிடும் பொருளால் தீங்கு ஏற்படுவதில்லை என்று ஜப்ருத்தீன் பீஹாரி ரஜியல்லாஹு அன்ஹுவிடம் கூறினார்கள். சிறிது நேரம் கழித்து உணவு உண்ட பின் கிளம்பும் வேலையில், இந்த வறுமையில் ஏன் நீங்கள் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை அழைத்து கஷ்டப்பட வேண்டும்? என ஜப்ருத்தீன் பீஹாரி ரஜியல்லாஹு அன்ஹு வினவினார். அதற்கு அந்த ஏழை நபர் மிக்க நம்பிக்கை மற்றும் சந்தோஷத்துடன் “ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹிவின் வருகையினால் அல்லாஹ் என் வீட்டிற்கு பரக்கத்தும், அருளும் புரிவான்” என்றார்.

ஒரு முறை ஒரு சின்னப் பையன் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹிவின் வீட்டிற்கு சென்று, தன்னுடைய வீட்டிற்கு வருமாறு அழைத்தான். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி செல்லமாக உங்கள் வீட்டிற்கு வந்தால் என்ன தருவீர்கள்? எனக் கேட்டார். அந்த சின்னப்பையன் தனது குர்தாவின் அடியில் உள்ள முடிச்சுகளை அவிழ்த்து சில பருப்பையும், மிளகாய்களையும் காட்டித் தருகிறேன் என்றான். நல்லது! நாளை வருகிறேன் என்றார் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி,

அடுத்த நாள் காலையில் அந்த சின்னப் பையன் வீட்டிற்கு ஹாஜி கி.ஃபாயத்துல்லா ரஜியல்லாஹு அன்ஹு அவர்களுடன் சேர்ந்து ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி சென்றார்கள். வீட்டிற்குள் நுழைந்ததும் அவருடன் வந்தவர் சொன்னார், இது இசைக் கலைஞனின் வீடு. அந்தச் சின்ன பையன் கைகளை கழுவிக் கொண்டு இருந்தான். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி பையனை நோக்கி உன் அப்பா எங்கே? என்ன செய்கிறார்? எனக் கேட்டுக் கொண்டிருக்க பர்தாவிற்கு பின் பக்கமாக பையனின் தாயார் சொன்னலானார்கள், “ஹுஜூர்! என் கணவர்

இறந்து விட்டார். இறக்கும் வேளையில் அவர் மன்னிப்பு தேடினார். எனக்கு ஆதரவாக இந்த பையன்தான் உள்ளான்" என்றார்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி பரக்கத்திற்காக வேண்டி உடனே துவா செய்தார்கள். பின் சாப்பிட்டு விட்டு அந்தப் பையனின் அழைப்பை மனதாராக ஏற்றுக் கொண்டேன் என்று கூறி விடைப் பெற்றார்கள்.

## தாயின் சொற்களுக்கு கீழ்படிதல்

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் தந்தையின் இறப்பிற்கு பின், தந்தையின் முழுச் சொத்துகளுக்கும் உரிமையாளர் ஆனார் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி, இருப்பினும் தம் தாயின் அனுமதி இல்லாமல் தமது நிலங்களிலிருந்து வரும் வருவாயை செலவு செய்தது இல்லை. ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தமது விருப்பப்படி ஏதாவது புத்தகம் படிப்பதற்கு வாங்க வேண்டும் என்றாலும் தாயின் அனுமதியில்லாமல் வாங்க மாட்டார்கள்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தமது மனதின் ஆசையான ரவ்ஜா-யே அன்வார், சைய்யதினா ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை காணச் சென்ற போதும் முதலில் தமது தாயாரிடத்தில் தான் அனுமதியைக் கேட்டார்கள். அதற்கு அவரது தாயார் "***பிஸ்மில்லாஹி குதா ஹா.'.பிஸ்***" என்று கூறி அனுமதியளித்தார்கள்.

## உலமாக்களுக்கு மரியாதை செலுத்துதல்

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் அஹ்லே சுன்னத் வல் ஜமாத்தை சார்ந்த உலமாக்களை கண்டால் அவர்களிடம் மிக்க அன்பும், மரியாதையையும் செலுத்துவார்கள். அஹ்லே சுன்னத் வல் ஜமாத்தை சார்ந்த உலமாக்களை பற்றி ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி " இந்த உலமாக்கள், எந்தப் பலனும் தராத ஊருக்குள் நுழைந்தால் இவர்களது

வருகையால், அந்த ஊர் பலனளிக்க கூடியதாக மாறிவிடும். இந்த உலமாக்கள், அந்த ஊரை விட்டு வந்துவிட்டால் மறுபடியும் பலனளிக்க இயலாத ஊராக மாறிவிடும்'' என்று கூறுகிறார்கள்.

ஹஜ்ரத் மஹதி ஹசன் பரகாதி ரஜியல்லாஹு அன்ஹு தாம் கண்ட அனுபவத்தை பின்வருமாறு கூறுகிறார்கள், '' நான் பரேல்வி ஷரீ.்.ப்பிற்கு ஒரு முறை சென்றேன். ஹுஜூர் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களே எழுந்து சென்று, எனக்கு உணவு கொண்டு வந்தார். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களே என் கைகளை கழுவி விட்டார். அப்பொழுது என் கையில் அணிந்திருந்த வளையத்தையும், மோதிரத்தையும் கேட்டார்கள். தங்கத்திலான அந்த அணிகலன்களை உடனடியாக அவர்களிடம் கொடுத்து விட்டேன். பிறகு நான் பம்பாய்க்கு சென்று விட்டேன். வேலை முடிந்த பிறகு நான் மஹ்ரரா ஷரீ.்.ப்பில் உள்ள என் வீட்டிற்கு சென்றேன்.

என் மகள் என்னிடம் ஒரு பார்சலை நீட்டி, இது பரேல்வியில் இருந்து வந்துள்ளது என்றாள். அதை நான் திறந்து பார்த்த போது, அதில் அந்த தங்க மோதிரமும், வளையமும் இருந்தது. அதனுடன் ஒரு துண்டு சீட்டில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி இந்தப் பரிசு உங்கள் மகளுக்கு என்று எழுதியிருந்தார்கள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் மரியாதையையும், அறிவையும் பார்த்து வியந்து நின்றேன்! பெரியவர்களிடத்தில் அவர் காட்டும் அன்பையும், அதே சமயத்தில் ஷரிஅத் பேணுவதில் மார்க்கத்தில் அனுமதிக்காததை தடுத்து, நல்லதை பின்பற்றச் சொல்லும் அவரது பக்குவம் என்னை மிகவும் கவர்ந்தது.''

## <u>மஸ்ஜிதுக்கு மரியாதை</u>

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மஸ்ஜிதில் (பள்ளிவாசல்) இதிகா.்.ப் இருந்தார்கள். அது ஒரு பனிக்குளிர் கால இரவு, சிறிது மழையும் அமைதியாக பெய்து கொண்டிருந்தது. ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஒளுச்செய்ய நினைத்தார். மஸ்ஜிதுனுடைய தரை ஈரமாகக் கூடாது என்று நினைத்தவாறு,

தனது போர்வையை நான்காக மடித்து, தான் ஒளுச்செய்யும் இடத்தில் போட்டுவிட்டு, ஒளுச்செய்ய ஆரம்பித்தார். ஒளுவினால் வெளியேறும் தண்ணீரை அந்தப் போர்வை இழுத்துக் கொண்டது. ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி ஒரு சொட்டுத் தண்ணீராலும் மஸ்ஜிதை ஈரமாக்கவில்லை. அந்த இரவு முழுவதும் தனது போர்வையின்றி குளிரால் நடுநடுங்கி கொண்டிருந்தார்கள்.

## ஹாஜிமார்களுக்கு மரியாதை

ஹஜ்ஜை வெற்றிக்கரமாக முடித்துவிட்டு தாயகம் திரும்பி வரும் ஹாஜிமார்களை காணுவதற்கு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மிகுந்த ஆர்வத்துடன் இருப்பார்கள். ஹாஜிமார்களைக் கண்டதும், ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மிக்க ஆர்வமாக மதீனா தய்யிபா சென்று புனித நபிகளார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் மஜார் ஷரீ.்.ப்பை ஜியாரத் செய்தீர்களா? என முதலில் கேட்பார்கள். ஹாஜிமார்கள் “ஆம்” என்று பதில் சொன்னார்களானால் உடனேயே ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, ஹாஜிமார்களின் பாதங்களை தன்னுடைய ஆசிர்வதிக்கப்பட்ட உதடுகளால் முத்தமிடுவார்கள். ஹாஜிமார்கள் “இல்லை” என்று மாற்றமாக பதிலளித்தார்கள் எனில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மனக்கஷ்டமடைந்தவர்களாக முகத்தை திருப்பிக் கொண்டு, பேச்சை முடித்துக் கொண்டு திரும்பி விடுவார்கள்.

## குழந்தைகளிடம் அன்பு

மதரஸாவில் படிக்கும் குழந்தைகள், தத்தமது ஊர்கள் தொலைவில் இருப்பதால் ஈத் பண்டிகைகளை மதரஸாவிலேயே கொண்டாடுவார்கள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஒவ்வொரு குழந்தைகளையும் தங்கள் வீட்டுக்குழந்தைகள் போல் கருதி அவர்களுடன் சேர்ந்து மிக்க மகிழ்ச்சியாக இருப்பார்கள். மேலும் எல்லோருக்கும் ஈதி (பண்டிகை காசு) வழங்கி, குழந்தைகளை மகிழ்விப்பார்கள்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுக்கு

பேரக்குழந்தைகள் பிறந்த மகிழ்ச்சியில் மதரஸா மன்ஸரே இஸ்லாம் மாணவர்களை எல்லாம் அழைத்து விருந்து படைத்தார்கள். விருந்து படைக்கும் முன் அவரவர்களுக்கு என்ன பிடிக்கும் என்று கேட்டு, பெங்காலி மாணவர்களுக்கு மீனும் அரிசியும், பீகார் மாணவர்களுக்கு ஃபீர்னி, ஜர்தா, பிரியாணியும், பஞ்சாபி மற்றும் மற்ற மாணவர்களுக்கு ஆட்டிறைச்சியையும் அளித்து விருந்துப் படைத்தார்கள்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி குழந்தைகளை மிகவும் நேசித்தார்கள். தன்னைச் சுற்றி குழந்தைகள் இருப்பது ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுக்கு பிடிக்கும். குழந்தைகளை எப்பொழுதும் திட்டியதில்லை, குழந்தைகள் தவறு செய்தார்கள் எனில் அருகினில் அழைத்து செய்த தவறை புரிய வைத்து, நேர் வழியினில் நடத்துவார்கள். சிறு குழந்தைகளின் ஒவ்வொரு சலாமிற்கும் பதில் சலாம் உரைப்பார்கள்.

## ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹிஅவர்களின் சில அழகிய பழக்க வழக்கங்கள்

1. ஹதீஸ்களை வைக்கும் புத்தக இடத்தில் வேறு புத்தகங்களை வைக்கமாட்டார்கள். ஹதீது புத்தகம் மீது வேறு எந்த சாதாரண புத்தகத்தையும் வைக்க மாட்டார்கள்.
2. ஹதீஸ்களை விளக்கி சொல்லிக் கொண்டிருக்கும் வேளையில் யாராவது இடையில் தேவையில்லாமல் பேசினால், ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹிக்கு பிடிக்காது.
3. அவர் கால் மேல் கால் போட்டுக் கொண்டு உட்கார மாட்டார்கள். இரண்டு முட்டிகளையும் சேர்த்து வைத்துக் கொண்டே உட்காருவார்கள்.
4. மீலாதுன் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் விழாக்களில் தஷஹுத் நிலைமையில் தான் உட்காருவர்கள். 5 அல்லது 6 மணி நேரம் ஆனாலும் சரியே!

5. பாடம் சொல்லித்தரும் வேளையில் வாயில் வெற்றிலை மென்ன மாட்டார்கள்.
6. “முஹம்மத்” என்ற பெயரை கேட்டதும் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் எனக் கூறி கட்டை விரல் நகங்களை ஒத்திக் கொள்வார்கள்.
7. எப்பொழுதும் சத்தமாக சிரித்ததில்லை.
8. “முஹம்மத்” என்ற அரபி எழுத்துக்கள் வடிவில்தான் எப்போதும் தூங்குவார்கள்.
9. கிப்லாவை(காபாவை) முன்னோக்கி கால் நீட்டியதும், துப்பியதும் இல்லை.
10. எந்த வேலையையும் வலது புறத்திலிருந்து தான் செய்து முடிப்பார்கள்.

## கராமத்துகள்

### முரீதை விடுதலையாக்கினார்

பசோரி என்ற ஊரைச் சேர்ந்த ஜனாப் அம்ஜத் அலி, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் முரீதாவார். ஒருமுறை அம்ஜத் அலி தன்னுடைய ரிவால்வரை எடுத்துக் கொண்டு வேட்டையாட சென்ற போது, தற்செயலாக துப்பாக்கி குண்டு வெளியேறி வழியில் சென்ற ஒருவரை தாக்கி ஆபத்திற்குள்ளாகியது. குண்டடிப்பட்டவர் இறந்து போனதால், அம்ஜத் அலி மீது போலிசார் கொலை வழக்கில் பதிவு செய்து தூக்கு தண்டனை கிடைக்குமாறு தீர்ப்பைப் பெற்று சிறையில் அடைத்தனர்.

தூக்கு தண்டனை பெறுவதற்கு சில நாட்களே எஞ்சியுள்ள நிலையில், அம்ஜத் அலி அவர்களின் குடும்பத்தார்கள் அவரைக் காண கவலையுடன் சிறைச்சாலை சென்று கதறி அழுதனர். தம் குடும்பத்தாரை நோக்கி அம்ஜத் அலி அவர்கள், “யாரும் அழ வேண்டாம், வீட்டிற்கு செல்லுங்கள். எனக்கு தூக்கு தண்டனை அளிப்பதாக கூறிய நாளில் இன்ஷா! அல்லாஹ் நான் வீட்டிற்கு வருவேன். என்னுடைய பீரோமுர்ஷித், சய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி என்னை விடுதலை செய்வதாக வாக்களித்துள்ளார்கள். நிச்சயமாக அவர்கள் என்னை விடுதலை செய்வார்கள்.” என நம்பிக்கையுடன் கூறினார்.

நாளை காலை தூக்குதண்டனை எனில் அதன் இரவு, அம்ஜத் அலி அவரின் தாயார் மிகுந்த வருத்தத்தோடு தன் மகனை காணச் சென்றார்கள். அம்ஜத் அலி தன் தாயாரை நோக்கி " நான் என்னுடைய பீரோமுர்ஷிதின் வார்த்தையில் நம்பிக்கை வைத்துள்ளேன். அதனால் நீங்கள் அழ வேண்டாம், வீட்டிற்கு செல்லுங்கள். இன்ஷா அல்லாஹ்! நாளை காலை உங்களுடன் சேர்ந்து வீட்டில் சிற்றுண்டியை சாப்பிடுவேன்." என்று கூறி தம் தாயாரை அனுப்பி வைத்தார்.

அடுத்த நாள் காலை தூக்குதண்டனை அளிக்கும் நேரம் நெருங்கியது. அம்ஜத் அலி அவர்களின் கழுத்தில் கயிறு இடப்பட்டது. அம்ஜத் அலி அவர்களிடம் கடைசி ஆசை ஏதாவது இருக்கிறதா? எனக் கேள்வி கேட்கப்பட்டது. அதற்கு அவர் மிகவும் அமைதியாக, "சொல்வதற்கு எதுவுமில்லை, என்னுடைய கடைசி நேரம் இன்னும் வரவில்லை." என்றார். தூக்கிலிடுவதற்கு அதிகாரிகள் நொடிகளை எண்ணிக் கொண்டிருந்தனர். அச்சமயம் மற்றொரு அதிகாரி, ராணி எலிசபெத்திடம் இருந்து வந்துள்ள தந்தியை எடுத்துக் கொண்டு ஓடி வந்தார். அந்த தந்தியில் எலிசபெத் ராணி தனது மகிழ்ச்சியின் காரணமாக சில சிறைகைதிகளை விடுதலை செய்வதாக அறிவிப்பு இருந்தது. அந்த பட்டியலில் அம்ஜத் அலியின் பெயரும் இருந்தது!

அம்ஜத் அலி தன் தாயாருக்கு சொல்லி அனுப்பியது போல் காலை உணவுக்கு தனது வீட்டிற்கு சென்றடைந்தார். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் கராமத்தை பாருங்கள்! அம்ஜத் அலியிற்காக, மற்ற சிறைகைதிகளையும் விடுதலைச் செய்ய வைத்தது!

## இறந்த குழந்தையை உயிர்ப்பித்தார்

ஒரு பெண் அழுது கொண்டே ஓடி வந்து ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடம், " உங்களின் துவாவால் எனக்கு ஆண் குழந்தை பிறந்தது" என்று ஞாபகப்படுத்தி, " இப்போது அக்குழந்தை என்னை விட்டு பிரிந்து சென்று விட்டது. என்னால் இந்த பேரிழப்பை தாங்க முடியவில்லை" என்று கதறி அழுது, ஆலா

ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடம் அக்குழந்தையை திருப்பித் தருமாறு கூறி வேண்டி நின்றாள்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அந்த பெண்மணியின் வீட்டிற்கு சென்றார்கள். குழந்தை கட்டிலில் கிடந்தவாறு அதன் மேல் துணியால் மூடப்பட்டிருப்பதை கண்டார்கள். அக்குழந்தையின் தாய் கதறியவாறு மீண்டும் மீண்டும் குழந்தையை திருப்பித் தருமாறு கூறிக் கொண்டிருந்தாள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி குழந்தையின் மீது மூடப்பட்டிருந்த துணியை அகற்றி, தன்னுடைய ஆசிர்வதிக்கப்பட்ட கையை குழந்தையின் கண்களில் மீது வைத்து கட்டளையிட்டவாறு “ மகனே! எழுந்திடு! உன் தாய் சொல்வதை கவனி” என்று கூறிக் கொண்டிருக்கும் வேளையில் உடனடியாக குழந்தை அழத் தொடங்கியது! அந்த வீட்டில் சுற்றி நின்றுக் கொண்டிருந்தவர்கள் எல்லாம் ஆச்சரியத்தில் வியந்து நின்றனர்.

எல்லோரும் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுக்கு நன்றியை தெரிவித்தனர். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அமைதியாக சிரித்துக் கொண்டவாரே “ நான் ஒன்றும் செய்யவில்லை, குழந்தை ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தது. நான் செய்தது எல்லாம் குழந்தையை எழுப்பியது மட்டும் தான்” என்றார்கள்.

## மனதில் உள்ளதை அறிந்தார்

பரேல்வி ஷரீ.ஃ.ப்பில் உலமாக்களையும், அவ்லியாக்களையும், பீரோமுர்ஷித் (குரு), மூரீத் (சீடன்) உறவுமுறையையும் தவறாக புரிந்து கொண்டவர்களும் இருந்தனர். தன்னுடைய நண்பன் தவறான வழியில் இருப்பதை கண்ட மூரீத் ஒருவர், ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடம் அழைத்துக கொண்டு சென்றால் தம் நண்பன் நேர்வழியை அடைவான் என்ற நம்பிக்கையில், தவறான கொள்கை கொண்ட நண்பனை அழைத்துச் சென்றார்.

செல்லும் வழியில் சில இனிப்புகளை தவறான கொள்கை

கொண்டவன் வாங்கி கொண்டான். இருவருமாக சேர்ந்து ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் புனித வீட்டில் அமர்ந்தனர். இன்னொரு முரீதானவர் சில இனிப்புகளை கொண்டு வந்து எல்லோருக்கும் பகிர்ந்துக் கொண்டிருந்தார்.

வழக்கமாக ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் முன்னிலையில் தாடி வைத்திருப்பவர்களுக்கு இரண்டு பங்கும், தாடி இல்லாதவர்களுக்கு, குழந்தைகளாயினும் ஒரு பங்கு என்று கணக்கு இருந்தது. எல்லோருக்கும் இனிப்பை வழங்கக்கூடிய முரீத், தவறான கொள்கையுடைய நபர் வந்ததும், அந்நபருக்கு முகத்தில் தாடி இல்லாததால், அவருக்கு ஒரு பங்கு இனிப்பை அளித்தார். இதனைக் கண்ட ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி அந்த நபருக்கு இரண்டு பங்கை வழங்கச் சொன்னார்கள். அதற்கு முரீத் "ஹுஜுர்! இவருக்கு தாடியில்லை அதனால் ஒரு பங்கு தானே!" எனக் கூறினார்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி "அவருக்கு இரண்டு பங்கை வழங்குங்கள், ஏனெனில் அவர் இரண்டு பங்கை அடைய ஆசைப்படுகிறார்" எனக் கூறினார்கள். இதைக் கேட்டதும் தவறான கொள்கையுடைய அந்த மனிதன், மனதில் உள்ளவற்றை அறியும் ஞானியின் ஒப்பற்ற ஆற்றலைக் கண்டு, மன்னிப்புக்கோரி! ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் முரீதானார்.

## வஹாபிகளின் பார்வையில் இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹுஅன்ஹு

1. "இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹுஅன்ஹு அவர்களின் அறிவையும், நிலையையும் கண்டு, என் மனதில் மிக்க மரியாதையை கொண்டுள்ளேன். தீனுடைய அறிவின்பால் மிக்க உள்நோக்கு பார்வையுடையவர். இன்னும் இவருடைய எதிரிகள் இவருடைய அறிவின் காரணமாக, இவரின் கருத்துக்களை ஏற்கக் கூடிய கட்டாயத்தில் தள்ளப்படுகின்றனர்."

- அபுல் ஆலா மவ்தூதி

2. "என் மனதில் இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹு அன்ஹு அவர்களைப் பற்றி மிக்க மரியாதையைக் கொண்டுள்ளேன். இவர் எங்களை கா.'.பிர் என்று அழைக்கிறார். இவர் இப்படி எங்களை சொல்வதெல்லாம் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் மீது வைத்திருக்கும் அன்பினால் மட்டுமேயன்றி வேறு எந்த காரணமும் கிடையாது."

- அஷ்ரப் அலி தானவி.

3. "கடந்து விட்ட அஹமத் ரஜா கான் ரஸியல்லாஹு அன்ஹு தன்னுடைய காலத்தில் "பேரறிவாளனாக" விளங்கினார். இவருடைய ஒவ்வொரு .'.பத்வாவும் எதிரான வாதத்திற்கு நல்ல ஆதாரமாக அமையும். மேலும் படிப்பதற்கு தகுதியானதாக இருக்கும்."

- முயீனுத்தீன் நத்வி

## அன்றாட உலக வாழ்க்கையின் மறைவிற்கு முன் வழங்கிய கடைசி அறிவுரைகள்

1. என்னுடைய ஆன்மா, என் உடலை விட்டு புறப்படும் நேரத்தில், என் அருகில் எந்த வித உயிருள்ளவைகளின் உருவப்படங்கள் எதுவும் இருக்ககூடாது.
2. சூரா யாசினையும், சூரா ராத்தையும் அதிகமாக படியுங்கள்.
3. தரூத் ஷரீ.'.ப்பை அதிகமதிகமாக ஓதுங்கள்.
4. அழுபவர்களை என் பக்கத்திலிருந்து தூரமாக வையுங்கள்.
5. சுன்னத்துகளுக்கேற்றவாறு என்னை குளிப்பாட்டுங்கள்.
6. மவ்லானா ஹாமித் ரஜா அல்லது அல்லாமா அம்ஜத் அலி ரஜியல்லாஹு அன்ஹுமா எனது ஜனாசா தொழுகையை தொழ வைக்க வேண்டும்.
7. என்னுடைய ஜனாசாவை தாமதப்படுத்தாதீர்கள்.
8. என்னுடைய ஜனாசாவை தூக்கும் போது, "**காபா கே பத்ரு துஜா, தும் பர் கரோடோன் சலாம்**"என்பதை ஓதுங்கள்.
9. என்னுடைய புகழைப் பற்றி எதுவும் படிக்காதீர்கள்.
10. என்னை மிகவும் லேசாக என்னுடைய மண்ணறையில் வையுங்கள்.

11. என்னுடைய "கப்ரை" என்னுடைய உயரத்திற்கு ஏற்றவாறு ஆழப்படுத்துங்கள். ஏனெனில் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் என் கப்ரில் வரும் போது, மரியாதை நிமிர்த்தம் காரணமாக, நான் அவர்களுக்காக நின்று சலாம் படிக்க வேண்டும்.
12. என்னுடைய க.்.பன் துணியானது சுன்னத்திற்கேற்றவாறு இருக்க வேண்டும்.
13. என்னுடைய ்.பாத்திஹாவில் வைத்து ஓதப்படும் உணவானது, ஏழைகளுக்கு கண்டிப்பாக கொடுக்கப்பட வேண்டும்.
14. ஹாமித் ரஜா என்னுடையவற்றில் உள்ளதை சரிபாதியாக சின்னவருக்கு ( ஹுஜுர் மு.்.ப்தி ஆஜம் ஹிந்த்) ரஜியல்லாஹுஅன்ஹுமா அவர்களுக்கு கண்டிப்பாக கொடுக்க வேண்டும். இல்லையென்றால் என் ஆன்மா சாந்தியடையாது.
15. நீங்கள் எல்லோரும் கண்டிப்பாக தீனில் நிலைத்து நில்லுங்கள், ஷரிஅத்தின் பாதையை விட்டுவிடாதீர்கள். நான் எந்த தீனில் பின்பற்றி இருந்தேனோ அதில் நீங்கள் நிலைத்து நில்லுங்கள்.

## இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹுஅன்ஹுவின் மறைவு

பரேல்வி ஷரீ.்.ப்பின் மின்னும் சூரியன், உலமாக்களின் கண்களின் குளிர்ச்சி, நூற்றாண்டின் முஜத்தித்(இஸ்லாத்தை உயிரூட்டுபவர்), தன்னுடைய நேரத்தின் கௌது நாயகம், தன்னுடைய நேரத்தின் இமாம் அபு ஹனீ.்.பா, நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் பூந்தோட்டத்திலிருந்து வரும் இனிய ரோஜாப்பூவின் மணம், சைய்யதினா ஆலா ஹஜ்ரத் இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹுஅன்ஹு அவர்கள், ஜும்மாவின் (வெள்ளிக்கிழமை) பாங்கு நேரம் 2.38 pm, 25ஸபர், ஹிஜ்ரி 1340 (28th October 1921) உலகத்தின் அன்றாட வாழ்க்கையிலிருந்து மறைந்து, வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

( "என்னுடைய பாதையில் இறந்தவர்களை, இறந்தவர்கள் எனக் கூறாதீர்கள். அவர்களுக்கு தேவையான ஆகாரத்தை நானே அளிப்பவனாக உள்ளேன்"

**– திருக்குர்ஆன்**)

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள், தன்னுடைய மறைவின் நேரத்தை 4 மாதங்கள் 20 நாட்களுக்கு முன்னதாகவே கனித்திருந்தார்கள்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் மறைவு நேரத்தில் சிரியா நாட்டை சார்ந்த வலியுல்லாஹ் (இறைநேசர்) ஒருவர், தன்னுடைய கனவில் புனித நபிகளார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமை பைத்துல் முகத்தஸில் காண்கிறார்கள். புனித நபிகளாரை சுற்றி நிறைய சஹாபாக்களும், வலிமார்களும் உட்கார்ந்தவாறு கண்டார்கள். அவர்கள் அனைவரும் யாரோ ஒருவரின் வருகைக்காக காத்திருந்தனர்.

தன்னுடைய கனவில் அந்த வலியுல்லாஹ் (இறைநேசர்) ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமை நோக்கி, "யா ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் யாருக்காக காத்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று வினவ, அதற்கு புனித நபிகளார் "அஹமத் ரஜா கான்" என்று கூற, அந்த இறைநேசர் "அஹமத் ரஜா கான் என்பவர் யார்?" என மீண்டும் கேட்க, ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் " பரேல்வியிலிருந்து வரும் ஆலிம்" என பதிலளித்தார்கள்.

ஆசிர்வதிக்கப்பட்ட இறைநேசர் (வலியுல்லாஹ்), தன்னுடைய தூக்கத்திலிருந்து எழுந்தவுடன் உடனடியாக சிரியாவிலிருந்து பரேல்வி ஷரீ∴ப் இருக்கும் இந்தியாவிற்கு வந்தார். அவர் பரேல்வி ஷரீ∴ப் வந்தடைந்த போது, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி உலகத்தின் அன்றாட வாழ்க்கையிலிருந்து மறைந்து இருந்தார்கள்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தமது நெருங்கியவர்களிடம் ஒரு முறை " என்னுடைய மறைவின் சமயம்

நெருங்கும் போது இந்தியா, இந்தியாவாகத்தான் இருக்கும். ஆனாலும் நான் கொஞ்சம் கூட மக்காவில் உயிர் பிரிவது போல் உணர மாட்டேன். என்னுடைய ஆசையெல்லாம், ஈமானுடன் மதீனா முனவ்வராவில் எனது உயிர் பிரிய வேண்டும். பிறகு ஜன்னத்துல் பகீயில் நல்ல முறையில் அடக்கம் ஆக வேண்டும்! எல்லாம் வல்ல அல்லாஹ் அனைத்தையும் செய்யக் கூடியவன்!” என்று கூறினார்கள்.

## மச(z)ார் ஷரீ.்.ப் (அடக்கஸ்தலம்)

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி உலகத்தின் அன்றாட வாழ்க்கையிலிருந்து மறைந்து பரேல்வி ஷரீ.்.ப், உத்திரப்பிரதேசம், இந்தியாவில் தனது அடக்கஸ்தலத்தைக் கொண்டு வாழ்ந்து வருகிறார்கள். சபர் 25ம் நாள் உரூஸ் தின விழா வைபவத்தில் உலகத்தின் பல பாகங்களிலிருந்து திரளான மக்கள் வந்து கலந்துக் கொண்டு, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் ஆசியைப் பெற்று செல்கின்றனர்.

வலியுல்லாஹ்க்கள் (இறைநேசர்கள்) எங்கும் இருப்பார்கள், எல்லாவற்றையும் பார்ப்பார்கள், கேட்பார்கள், உதவி செய்வார்கள், நம்முடைய சலாமிற்கு பதில் சலாம் கூறுவார்கள், நம்மை வழி நடத்துவார்கள் ( அவர்கள் பெற்ற வெற்றி பாதையில்) போன்றவைகளை நமக்கு உணர்த்திய சையதே ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, இறைநேசராக காட்சியளித்து நமக்கு உணர்த்தியதை செய்து கொண்டும் இருக்கிறார்கள்.

## இமாம் அஹமத் ரஜா ரஜியல்லாஹு அன்ஹு அவர்களால் உலக முஸ்லிம்கள் அடைந்த நன்மைகள்

1. உலக முஸ்லிம்களின் ஈமான், தவறான கொள்கைகளையுடைய ஈமான் கெட்ட வஹாபிகள், காதியானி, தேவ்பந்தி தப்லீகி ஜமாத், அஹ்லே ஹதீஸ் மற்றும் பல சதிகார கும்பல்களின் பிடியிலிருந்து காப்பற்றப்பட்டது.

2. இறைநேசர்களின் சூ.ஃ.பி பாதைகள், இஸ்லாமியர்களுக்கு தெளிவாக புரிய வைத்து, ஷரிஅத்தே முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் தெளிவாக உணர்த்தப்பட்டது.

3. புனித நபிகளார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை நேசிப்பது ஈமானின் உயிர் என்பதை உணர்த்த நாத் ஷரீ.ஃ.ப் (நபிகள் புகழ் பாமாலை) யை எழுதி, மனதினால் உருகி இன்பக் காதலில் உலக முஸ்லிம்களை பாட வைத்து, இறைகாதல் சுகத்தை பெற வைத்தார்கள்.

4. 25க்கும் மேற்பட்ட பல்கலைக்கழகங்கள் (அல்அஜார் யுனிவர்சிடி, கைரோ. பஞ்சாப் யுனிவர்சிடி, etc.,) ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி அவர்களின் படைப்புகளை ஆராய்ச்சி செய்து வருவதுடன் தத்தமது பாடத்திட்டத்தில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் புத்தகங்களையும் சேர்த்து உலக அறிவியல், ஆன்மீகம், இஸ்லாமியச் சட்டம் ஆகியவற்றை தெள்ளத்தெளிவாக உலகிற்கு பறைசாற்றுகிறது.

5. இதுவரை 21 நபர்கள் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் படைப்புகளையும், ஹனஃ.பி சட்டங்களையும் ஆராய்ந்து டாக்டர் (Ph.D) பட்டம் பெற்றுள்ளனர். ஆராய்ச்சிகள் இன்னும் தொடர்ந்து கொண்டிருக்கின்றது.

6. ரஸா அகாடமி(இங்கிலாந்து), ரஸா அகாடமி(இந்தியா), ரஸா அகாடமி (தென் ஆப்ரிக்கா), IARF(கேரளா) போன்றவற்றின் மூலம் இஸ்லாமிய வளர்ச்சிப் பணிகள் மேற்கொள்ளப்பட்டு மக்கள் இன்றளவும் பயனடைந்து வருகின்றனர்.

7. இந்திய அரசாங்கம் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் இஸ்லாமிய இறைநேசத்

தன்மையை வணக்கம் செலுத்தும் விதமாக, ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி அவர்களின் மச(z)ார் ஷரீ∴ப்பை தபால் தலையாக (Postage Stamp) வெளியிட்டு கௌரவப்படுத்தியது. மேலும் கச்பூஜ் -அகமதாபாத் - அஜ்மீர் - பரேல்வி வரை செல்லும் இரயில் வண்டிக்கு "**ஆலா ஹஜ்ரத் எக்ஸ்பிரஸ்**" என்று பெயரிட்டு கௌரவப்படுத்தியுள்ளது.

இது இஸ்லாமிய மார்க்கத்திற்கு இந்திய அரசாங்கம் செலுத்தும் கண்ணியத்தைப் பறைச்சாற்றுகிறது.

## ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹிவின் சில பதில்கள்

**கேள்வி:-**

இறைநேசர்களின் (வலிமார்கள்) ஜியாரத்தை செய்யும் போது எப்படி முறையாக செய்ய வேண்டும்? என்னென்ன குர்ஆனுடைய ஆயத்துக்கள் ஓத வேண்டும்?

**பதில் :-**

புனித இறைநேசர்களை ஜியாரத் செய்ய முற்படும் போது, மசா(Z)ர் ஷரீ∴ப்பின் கால்பக்கமாக உள்ளே நுழைவது சிறந்தது ஆகும். முடிந்தால் மசா(Z)ர் ஷரீ∴ப்பிலிருந்து நான்கு கைகள் நீளம் தள்ளி நிற்பதும் சிறந்தது ஆகும். மிதமான குரலில் பின்வருமாறு சலாம் கூறலாம். " ***அஸ்ஸலாமு அலைக்கும்! யா சைய்யதி! வ ரஹ்மத்துல்லாஹி! வ பரகாதஹு!*** " பின்பு ∴பாத்திஹாவை பின்வருமாறு ஓதலாம்.

1. தரூதே கௌசியா – 3 தடவை ( அல்லாஹும்மா ஸல்லி அலா சைய்யதினா வ மவ்லானா முஹம்மதிம் மாதினில் ஜுதி வல் கரமி வ அலைஹி வ பாரிக் வ ஸல்லிம்)
2. சூரா ∴பாத்திஹா - 1 தடவை
3. ஆயத்துல் குர்ஸி - 1 தடவை
4. சூரா இக்லாஸ் - 7 தடவை
5. தரூதே கௌசியா - 7 தடவை

மேலும் நேரமிருந்தால் சூரா யாஸீன் மற்றும் சூரா முல்க் ஆகியவற்றை ஓதி அல்லாஹ்விடம் பின்வருமாறு துவா கேட்கலாம். "யா அல்லாஹ்! நான் ஓதியதற்கு பரிகாரமாக, உன்னுடைய வெகுமதிகளை உன்னுடைய கொடை குணத்திற்கு ஏற்றாற் போல் எனக்கு அளிப்பாயாக! என்னுடைய தகுதியான செயலை பொறுத்து அல்ல. மற்றும் உனது வெகுமதிகளை உன்னுடைய தேர்ந்தெடுக்கப்பட்ட அடியார்கள் ( **நம் முன்னால் இருக்கும் இறைநேசரின் பொருட்டால்** ) மூலமாக எனக்கு வழங்குவாயாக!" – ஆமின்.

பிறகு அடியார்கள் தங்களுக்கு வேண்டிய முராதுக்களை ஷரிஅத்திற்கு கட்டுப்பட்டு அல்லாஹ்விடம் துவா கேட்டு, இந்த துவாவை இறைநேசரின் வஸீலாவைக் கொண்டு ஏற்றுக் கொள்வாயாக என்று கூறி, துவா கேட்டு முடித்து விட்டு மீண்டும் ஒருமுறை மிதமான குரலில் மேற்கூறியவாறு சலாமை கூறிவிட்டு விடை பெறலாம்.

***கேள்வி எண் 169, பக்கம் 212***
***பாகம் 4, புத்தகம்- ஃபத்வாயே ரஜ்வியா***

**கேள்வி :-**

இப்பொழுது நாம் காணும் வஹாபிகளின் கூட்டம் குலஃபாயே ராஷிதீன்களுடைய காலக் கட்டத்திலேயே வெளிப்பட்டு விட்டார்களா?

**பதில் :-**

சைய்யதினா அப்துல்லா இப்னு அப்பாஸ் ரஸியல்லாஹு அன்ஹு அவர்கள், அமீருல் மூமினீன் சைய்யதினா அலி முர்தஸா ரஸியல்லாஹு அன்ஹு அவர்களிடம் அனுமதி பெற்றுக் கொண்டு அமீருல் மூமினுடைய எதிரிகளிடம் சென்றார்கள். அந்த குழப்பவாதிகளிடம் " எந்த விஷயத்தில் நீங்கள் அமீருல் மூமினீனுடன் உடன்படிக்கை இல்லாமல் இருக்கிறீர்கள்?" என்று வினவ, அதற்கு அந்தக் கூட்டம், "எதற்காக சிஃப்பீனுடைய பிரச்சினையில் சய்யதினா அபு மூஸா அஜாரி ரஜியல்லாஹு அன்ஹுவை நடுவராக (தீர்ப்பு அளிப்பவராக) அமீருல் மூமினீன் நியமித்தார்கள்?" இது "ஷிர்க்" ஆகும்.

(அது ஷிர்க், இது ஷிர்க் என்ற யுக்தியைதான், இன்றைய வஹாபிகளும் அதிகமாக பயன்படுத்துகின்றனர். நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமின் மறைவான ஞானத்தை பற்றி குறிப்பிடும் போது, உண்மையான முஸ்லிம்கள் அதை "அதாயி- அல்லாஹ்வின் அருட்கொடை" என்றும், "ஜாத்தி – தனிப்பட்டது" இல்லை என்றும் கூறுவார்கள். ஆனால் இதை வஹாபிகள், ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமுக்கு மறைவான ஞானம் என்பது கிடையாது என்றும், அப்படி உள்ளது என்று நினைப்பின் "ஷிர்க்" ஆகும் என்று கூறி திரிகின்றனர்.)

குழப்பவாதிகள், அல்லாஹ் திருமறையில் " தீர்ப்பானது அல்லாஹ்வின் புறத்திலேயிருந்து வரும். வேறு யாரிடமிருந்தும் இல்லை." என்றனர். சைய்யதினா அப்துல்லா இப்னு அப்பாஸ் ரஜியல்லாஹு அன்ஹு " அல்லாஹ் திருக்குர்ஆனிலே இப்படியும் கூறுகிறான் - கணவன் மனைவிக்கு இடையே தகராறு ஏற்பட்டால், கணவனும் மனைவியும் அவரவர்கள் பக்கமாக ஒரு நடுவரை நியமித்துக் கொள்ளுங்கள். மற்றும் இருவரும் மறு ஆலோசனை செய்தால், அல்லாஹ் இருவரையும் சேர்த்து வைப்பவனாக உள்ளான்." என்றார்கள்.

சைய்யதினா அப்துல்லா இப்னு அப்பாஸ் ரஜியல்லாஹு அன்ஹு திருக்குர்ஆனின் ஆயத்தை கூறிவிட்ட பின்பு, " என்ன நீங்கள் திருக்குர்ஆனில் இருக்கும் ஒரு சில கருத்துக்களை ஏற்றுக் கொண்டு நம்பிக்கையாளராகி, ஒரு சில ஆயத்துக்களின் கருத்துக்களை விட்டுவிட்டு கு..ப்ர் செய்கிறீர்களா? எனக் கேட்டதும். அந்தக் கூட்டத்தில் உள்ள பாதி பேர்கள் (5000 நபர்கள்) மன்னிப்புக்கோரி அமீருல் மூமினீனுடன் சேர்ந்தனர். மீதி இருக்கக் கூடிய பாதி பேர்கள் (5000 நபர்கள்) முரண்பாடாகவே எதிர்த்து நின்றனர். இதைக் கேள்விப் பட்ட அமீருல் மூமினீன் மீதியிருக்கக் கூடியவர்களை கொன்று விடுமாறு உத்தரவு பிறப்பித்தார்கள்.

சைய்யதினா இமாம் ஹசன், இமாம் ஹுசைன் மற்றும் சஹாபாக்கள் (ரஜியல்லாஹு அன்ஹுமா) சற்றுக் கவலை அடைந்தனர். ஏனெனில் அந்தக் கூட்டத்தார்கள் இரவு முழுவதும் நின்று தொழுகின்றனர். பகல் முழுவதும் திருக்குர்ஆன்

ஓதுகின்றனர். இவர்களுக்கு எதிராக எப்படி வாளை உயர்த்துவது? என்று தயக்கம் கொண்டனர்.

அவ்வேளையில் அலி முர்தஸா ரஜியல்லாஹு அன்ஹு அவர்கள், ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் இக்கூட்டத்தாரைப் (வஹாபிகள்) பற்றி முன்னதாகவே அறிவிப்பு செய்ததை எடுத்துக் கூறினார்கள். " இஸ்லாத்தில் குழப்பம் விளைவிப்பவர்கள் தங்களுடைய வெளிப்படையான இபாதத்தில் தீவிரமாக இருப்பார்கள்(நோன்பு, தொழுகை, ஹஜ்,etc.,) ஆனால் இவர்கள் தீனை விட்டு வில்லிருந்து விடுபட்ட அம்பைப் போல் வெளியேறிவிட்டனர். எப்பொழுதும் இவர்கள் மீண்டும் தீனின் பக்கம் திரும்ப மாட்டார்கள். இவர்கள் ஓதும் திருக்குர்ஆன் இவர்களுடைய தொண்டைகளுக்கு கீழ் இறங்காது" என்றார்கள்.

அமீருல் மூமினீன் சைய்யதினா அலி முர்தஸா ரஜியல்லாஹு அன்ஹு அவர்களின் கட்டளைக்கிணங்க வஹாபிகளுடன் ஜிஹாத் செய்வதற்கு முஸ்லிம் படை தயாரானது. ஜிஹாத் நடந்து கொண்டிருக்கும் வேளையில், அமீருல் மூமினீன் அவர்களுக்கு சில எதிரிகள் ஆற்றங்கரையை கடக்க போவதாக தகவல் வந்தது. அமீருல் மூமினீன் தன்னுடைய தக்வாவின் (பயபக்தி) காரணமாக, " அல்லாஹ்விற்காக! எதிரிகளில் அனைவரும் ஆற்றின் இந்தப் பக்கத்திலேயே கொன்றாக வேண்டும்" எனக் கூறி படைத்தளபதிகளை துரிதப்படுத்தினார். அமீர் தன்னுடைய படைகளுக்கு " எதிரிகளின் சடலங்களை தேடுங்கள், அவர்களில் ஜுல் தாதியா தென்பட்டால், உலகிலேயே மிக கொடியவனான அவனை கொன்றுவிடுங்கள். நீங்கள் அவனை விட்டு விட்டீர்களானால், உலகிலுள்ள சிறந்த மனிதர்களை கொன்று குவித்தது போல் ஆகும்." என்று கூறி தேடலை ஆரம்பித்தனர்.

சில சடலங்களுக்கு அடியில் சபிக்கப்பட்ட அந்தக் கொடியவன் இறந்து கிடந்தான். அவனுடைய ஒரு கை பெண்ணின் மார்பகம் போன்ற வடிவில் சிதைக்கப்பட்டிருந்தது. இதைப் பார்த்த அமீருல் மூமினீன் சைய்யதினா அலி முர்தஸா ரஜியல்லாஹு அன்ஹு மிகுந்த உயர்ந்த குரலில் தக்பீர் ( அல்லாஹு அக்பர்) முழங்கி, அல்லாஹ்வை போற்றிப் புகழ்ந்தார். குழப்பவாதிகளை பூமியிலிருந்து அப்புறப்படுத்தியதற்காக அல்லாஹ்விற்கு நன்றி செலுத்தினார்கள்.

பிறகு அமீருல் மூமினீன் சைய்யதினா அலி முர்தஸா ரஜியல்லாஹு அன்ஹு தமது படைகளை நோக்கி, " இந்த சபிக்கப்பட்ட பாவிகளின் கூட்டம் முற்றிலுமாக அழிந்து விட்டது என்று நினைக்கிறீர்களா? நிச்சயமாக இல்லை! இன்னும் நிறைய பேர் தன்னுடைய தாயின் கருவறையிலும், இன்னும் நிறைய பேர் தன்னுடைய தந்தையின் விந்தனுவிலும் இருக்கின்றனர். இவர்களில் ஒரு கூட்டம் முற்றிலுமாக அழிக்கப்பட்டால் மற்றொரு கூட்டம் புதிய ஃபித்னா, குழப்பங்களோடு வருவார்கள். இந்த சபிக்கப்பட்ட கூட்டம், சபிக்கப்பட்ட தஜ்ஜாலின் வருகை வரும் வரை தொடரும்!" என வஹாபிகள் பற்றிக் கூறுகிறார்கள்.

இந்த வஹாபிகள் எதிர்காலத்தில் தங்களை இஸ்லாத்தின் சீர்திருத்தவாதிகள் எனக் கூறிக் கொண்டு வெளிபடுவார்கள் என்று சஹீ ஹதீஸ் ஷரீஃப்பில் சில அடையாளங்களையும் குறிப்பிடப்பட்டுள்ளது. அவற்றில் சிலவற்றை இங்கு பார்ப்போம்!

1. உங்களுடைய தொழுகைகள், அவர்களின் தொழுகைகளோடு ஒப்பிடும் போது, அது சிறப்பில்லாதாகவும், குறைவுள்ளதாகவும் இருக்கும். இதே போல் உங்களுடைய நோன்பும், நல்லச் செயல்களும் அவர்களுடன் ஒப்பிடும் போது குறைவுள்ளதாகவே காணப்படும்.
2. அவர்கள் திருக்குர்ஆன் ஓதுவார்கள், ஆனால் அது அவர்களின் தொண்டைகளுக்கு கீழ் இறங்காது.
3. அவர்களது எழுத்துக்களும், பேச்சுக்களும் இனிமையாக தோற்றமளிக்கும். ஒவ்வொரு காரியத்திலும் வெற்றிப் படிகட்டுகளை அடைவார்கள்.
4. அவர்களின் நிலையானது வில்லிலிருந்து இலக்கை நோக்கி விடுபட்ட அம்பைப் போன்றதாகும்.
5. மொட்டைத் தலையுடன் இருப்பது, அவர்களின் அடையாளங்களில் ஒன்றாகும்.
6. அவர்களின் இடுப்பு ஆடைகள் கெண்டை காலிலிருந்து மிகவும் உயர்ந்ததாகக் காணப்படும்.

# சைய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி மேலும் கூறுகையில் :-

புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஹுனைன் போர்க்களத்தில் கைப்பற்றிய பொருட்களை பங்கிட்டு வழங்கிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒருவன் (அந்த காலத்து வஹாபி) புனித நபிகளார் ஸல்லல்லாஹீ அலைஹிவஸல்லம் பங்கிட்டு கொடுக்கும் முறை சரியில்லை என்றும், சிலர் சிலரைக் காட்டிலும் அதிகமாகவும், சிலர் சிலரைக் காட்டிலும் குறைவாக பெறுவதாகக் கூறினான். இதைக் கேட்ட சைய்யதினா உமர் ∴பாருக் ரஜியல்லாஹு அன்ஹு " யா! ரசூலுல்லாஹ்! இந்த முனா∴பிக்கின் (நயவஞ்சகன்) தலையை வெட்டி வீழ்த்துவதற்கு அனுமதியை தாருங்கள்" என்றார்கள். அதற்கு அல்லாஹ்வின் நபி, "விட்டு விடுங்கள் ஏனென்றால் இப்படிப்பட்ட இந்த மாதிரி மக்கள் பிறப்பினிலே இப்படித்தான்" என்று கூறிவிட்டு புனித நபிகளார் " துரதிஷ்டமாக, நான் உங்களிடம் நீதியுடன் நடக்கா விட்டால், வேறு யார் உங்களிடம் நீதியுடன் நடப்பார்? என்னைக் காட்டிலும் துன்பத்தை அதிகம் தாங்கிய எனது சகோதரர் மூஸா அலைஹிசலாம் மீது அல்லாஹ் தன் கருணையை பொழியட்டும்" என்றார்கள்.

புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமை நீதி தெரியாமல் பங்கிட்டு கொடுக்கிறார் என்று நபிகளார் மீதே குறை சொல்லிய, அதே முனா∴பிக்குகள் (வஹாபிகள்) தான், இன்றும் புனித நபிகளாரின் மீது குறை ( மறைவான ஞானம் இல்லை, முன்பின் பாவம் செய்தவர், சாதரண மனிதர் – மாஜ(z)ல்லா!) சொல்லித் திரிகின்றனர்.

ஒரு நாள் புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் சஹாபா பெருமக்கள் சூழ இருந்தார்கள். அப்போது ஒருவன் (அந்த காலத்து வஹாபி) மஸ்ஜிதின் (பள்ளிவாசல்) வாசலில் நின்று விட்டு, உடனடியாக மஸ்ஜிதே நபவி பள்ளிவாசலுக்குள் சென்றுவிட்டான். புனித நபிகளார் ஸல்லல்லாஹீ அலைஹிவஸல்லம் சஹாபாக்களை நோக்கி, " உங்களில் யார் அவனை கொன்று விட்டு வருவீர்கள்?" எனக் கேட்டதும்,

சைய்யதினா அபூபக்கர் சித்திக் ரஸியல்லாஹு அன்ஹு எழுந்து சென்றார்கள். அந்த மனிதன் தொழுகையில் இருந்தான் அதனால் விட்டுவிட்டு வந்து நிலைமையை புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமிடம் கூறினார்கள்.

மீண்டும் புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் " யார் அவனை கொல்வீர்கள்?" எனக் கேட்டதும், சய்யதினா உமர் ஃபாருக் ரஸியல்லாஹு அன்ஹு அந்த மனிதனை நோக்கி சென்றார்கள். அவன் (வஹாபி) தொழுகையின் நிலையிலே இருந்ததால் அவரும் விட்டுவிட்டு வந்து விட்டார்கள்.

மூன்றாவது முறையாக புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் "யார் அவனை கொல்வீர்கள்?" என்றதும் சைய்யதினா அலி அல்முர்தஸா ரஜியல்லாஹுஅன்ஹு எழுந்து நின்று "நான் அவனை கொன்று விடுவேன்" என்றார்கள். அதற்கு புனித நபிகளார் "ஆம், உங்களால் முடியும் ஆனால் நீங்கள் அவனை காண மாட்டீர்கள்" என்றார்கள்.

சைய்யதினா அலி ரஜியல்லாஹுஅன்ஹு மஸ்ஜிதுன் நபவி சென்றடைந்த போது, அந்த மனிதன் (வஹாபி) அங்கிருந்து முன்னதாகவே வெளியேறி இருந்தான். நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், அலி ரஜியல்லாஹுஅன்ஹுவை நோக்கி "நீங்கள், அவனை கொன்று இருப்பீர்களாயின், இந்த உம்மத்தில் வரக்கூடிய குழப்பங்களை எல்லாம் நீக்கியவர்களாக இருப்பீர்கள்." என்றார்.

அவன்தான் வஹாபிசத்தின் தந்தை. அவனுடைய சந்ததிகள் தான் இன்று நாம் காணும் வஹாபிகள். இவர்கள் தான் பூமியில் குழப்பம், சண்டை, சச்சரவுகளை இந்த உம்மத்தில் தோற்றுவிப்பவர்கள். அந்தக் கொடிய மனிதன் பள்ளிவாசலின் வாயிலில் நின்ற கணம், ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் ஒரு பார்வை, அவனுடைய மனதில் உள்ளவற்றை எல்லாம் அறிந்தது! ஆம், அவன் (வஹாபி) மனதில் "இந்த மஜ்லிஸில் தன்னை விட சிறந்தவர் யாருமில்லை எனவும். தன்னை விட தொழுவதிலும், பயபக்தியிலும் சிறந்தவர் எவருமில்லை என்ற

கர்வமும் இருந்தது.'' உண்மையில் தொழுகை என்பது புனித நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமின் கொடை மற்றும் கருணையே என்பதை தெரியாமல் இருந்தான்.

புனித நபிகளார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமின் சீரிய அடிமை ஆகாதவரையில் ஒரு நேசன் அல்லாஹ்வின் அடிமை ஆக முடியாது! எனவே தான் அல்லாஹ் திருமறையில் '' அல்லாஹ்வின் மீதும் நபியின் மீதும் நம்பிக்கை கொண்டு வாருங்கள் மற்றும் ரசூலின் மீது மரியாதையையும், கண்ணியமும் செலுத்துங்கள். அல்லாஹ்வை இரவும், பகலும் புகழுங்கள்(தொழுகை).'' எனக் கூறுகிறான். ஈமானின் முக்கிய அங்கம் எதுவென்றால் ரசூலின் (நபியின்) மீது வைக்கும் மரியாதையே ஆகும். நபியின் மீது மரியாதை இல்லாமல் எந்த வடிவில் நோன்பு, தொழுகை, ஹஜ் என்று இபாதத் இருந்தாலும் அது அர்த்தமற்றது (வீணானது). இன்றைய உலகில் ஏகப்பட்ட அப்துல்லாக்கள் ( அல்லாஹ்வின் அடிமை) இருக்கின்றனர். ஆனால் உண்மையான மற்றும் நம்பிக்கையான அப்துல்லா என்பது யார் ஒருவர் அப்தே-முஸ்த.்.பா (நபியின் அடிமை) ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் இருக்கின்றாரோ அவரேயாவார். அப்படி இல்லையென்றால் அந்த (நபர்) அடிமை, அப்தே-ஷைத்தான் (சபிக்கப்பட்ட சாத்தானின் அடிமை) ஆவார். அல்லாஹுதாலா மன்னிக்கட்டும்! ***ஆதாரம் - அல்மல்.்.பூஸாத் ஷரீ.்.ப்***

## இமாம் அஹமத் ரஜா கான் ரஜியல்லாஹுஅன்ஹுவின் எதிரிகள்

சைய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுக்கு தனிப்பட்ட முறையில் எந்த எதிரிகளும் கிடையாது. நபிகள் நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமின் எதிரிகளே ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் எதிரிகள் ஆவார். எந்த விதத்திலும் நபிகள் நாயகத்தின் மரியாதையையும், சிறப்பையும் குறைக்கும் விதத்தில் முனா.்.பிக்குகள் செயல்பட்டால், முனா.்.பிக்குகளை உலகத்திற்கு அடையாளம் காட்டும் விதமாக ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தனது எழுத்திலும், செயலிலும் வஹாபிகளுக்கு

சாட்டையடி கொடுப்பார்கள். எனவே தான் வஹாபிகளுடைய பார்வையில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி எதிரியாக தெரிகின்றார்கள்.

பொதுவாகவே ஆரம்பக் காலத்திலிருந்து வஹாபிகள் திருக்குர்ஆன், ஹதீஸ் ஷரீ∴ப் போன்றவற்றை தமது குறைவான அறிவின் செயலால் தவறான அர்த்தங்களை கொண்டு அதற்கு த∴ப்ஸீரும், விளக்கவுரையை எழுதியும் அதற்கு தமது முட்டாள்தனமான வியாக்கினமும் செய்து எப்படியும் உலக முஸ்லிம்களின் ஈமானை நாசப்படுத்தி வெறும் தொழுகை, நோன்பு, ஹஜ் போன்ற வெளிப்படையான இபாதத்துகள் செய்யக் கூடிய ரோபோக்களாக (இயந்திர பொம்மை) மாற்ற வேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டு சபிக்கப்பட்ட சாத்தானோடு கை கோர்த்துக்கொண்டு ஊர் முழுவதும் சுற்றிச் சுற்றி வருகின்றனர். பெயரளவில் தங்களை இஸ்லாத்தின் சீர்திருத்தவாதிகள் எனவும், சில்லா போய் (40 நாள், 6 மாதம்) தீனைக் கற்றுக் கொள்ளலாம் என்று கூறி பாமர மக்களை குழப்பி - ஈமானை முழு அளவில் நாசம் செய்கின்றனர்.

இந்த வஹாபிகளில், சிலர் என்னவென்று தெரியாமலேயே ஆட்டுமந்தை போல் வஹாபிகளின் பின்னால் செல்பவர்கள் ஒரு பக்கம். எல்லாம் தெரிந்தும், அறிந்தும் உலகத்தின் ஆதாயத்திற்காக ( பணம், பதவி, மண்ணாசை, பெண்ணாசை) வஹாபிகளின் பின்னால் செல்லும் நயவஞ்சகர்கள் ஒரு பக்கம். யார் எப்படி வந்தாலும் சரி, ஈமானை கெடுப்பது மட்டுமே எங்கள் வேலை என்று வழி நடத்தும் தலைவர்கள்(அமீர்கள்). இவ்வாறு இவர்களில் பல ரகங்கள். இவர்களின் (வஹாபிகளின்) ஒவ்வொரு தவறான கருத்துக்களை களைத்து, பாமர முஸ்லிம் மக்களை காப்பாற்றும் எண்ணத்தில் சைய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தனது ஆன்மீக மெய்ஞான ஆற்றலால் சரியான ஆதாரங்களை கொடுத்து, வஹாபியக் கொள்கைகளுக்கு முட்டுக்கட்டை போட்டார்கள்.

சைய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி, திருக்குர்ஆன் - ஹதீது ஷரீ∴ப்பை அடிப்படையாகக் கொண்டு

வஹாபியக் கொள்கைகளுக்கு எதிராகத் தரும் ஆதாரங்களுக்கும், விளக்கங்களுக்கும் பதில் தர முடியாமல் திணறிய வஹாபிகள். தங்களின் எதிரியாகக் கருதி ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹியின் மீது வீண்பழிகளையும், குற்றங்களையும் சுமத்தி திரிகின்றனர். என்ன தான் கரிய மேகங்கள் பரேல்வியின் சூரியனை மறைத்தாலும், சூரியன் மறையுமா?

திருக்குர்ஆன், ஹதீது ஷரீ∴ப் போன்றவற்றின் மொழிப்பெயர்ப்புகளை தான்தோன்றித்தனமாக எழுதிய தைரியத்தின் காரணமாக, அங்கு கையை வைத்து, இங்கு கையை வைத்து கடைசியில் ''ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி தம்மை நபி என்று சொல்கிறார்'' என்று கூறி, அதற்கு ஆதாரம் ஆலா ஹஜ்ரத் எழுதிய புத்தகமே என்று தங்களின் வழக்கமான பொய்யான வேலையை தொடர்ந்தனர். இதற்கு எதிர்ப்பு தரும் விதத்தில் சையத் ஷா ஆலே ரசூல் நஜ்மி சஜ்ஜாதா நஷீன் என்பவர், இப்படி பொய்களை கூறிய தேவ்பந்தி தப்லீக் ஜமாத்தின் உற்பத்தியாளர்கள் மதரஸாவை சேர்ந்த மௌலவி இப்ராஹிம் ஆதம் (ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தம்மை நபி எனச் சொல்கிறார் என பொய் கூறியவன்) மீது, சவால் விட்டார்கள். அது என்னவென்றால் கூறிய பொய்யை, உண்மை என நிருபித்தால் 1 இலட்ச ரூபாய் பரிசாக வழங்கப்படும் என்றார். இதுவரை மௌலவி இப்ராஹிம் ஆதம் வரவில்லையாம். இன்றும் எந்த வஹாபியக் கொள்கை கொண்ட தலைவர்களும் மௌலவி இப்ராஹிம் ஆதம் கூறிய பொய்யை, உண்மை என நிருபித்தால் 1 இலட்ச ரூபாய் பரிசை தட்டிச் செல்லலாம்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் நமக்கு கூறிய ''நான் எந்த தீனில் பின்பற்றி இருந்தேனோ, அதில் நீங்கள் நிலைத்து நில்லுங்கள்'' என்பதை தவறாக அர்த்தம் கொண்டு தேவ்பந்தி தப்லீக் ஜமாத் மதரஸாவைச் சார்ந்த மௌலவி இப்ராஹிம் ஆதம் ''ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தன்னுடைய அடியார்களை (மக்களை) தன்னைப் பின்பற்ற சொல்கிறார். இஸ்லாத்தை விட்டுவிட்டு ஒருவரை பின்பற்றுவது ஷிர்க் ஆகும்'' என்று கூறி மக்களை குழப்பி வருகின்றனர்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை பின்பற்றுபவர்கள் மக்கா, மதீனா சென்றாலும் மஸ்ஜிதே ஹராமிலும், மஸ்ஜிதே நபவிய்யிலும் இமாம்களை பின் தொடர்ந்து (**வஹாபி இமாம், இமாமத் செய்யும் போது தொழமலிருப்பது**) தொழுவதில்லை என இப்ராஹிம் ஆதம் குற்றம் சாடுகிறார். ஆம் இது உண்மைதான்! ஏன் இமாம்களை பின் தொடர்ந்து தொழுவதில்லை என்றால், மக்கா, மதீனாவை சார்ந்த பல உலமாக்கள் இப்னு தைமிய்யா, முஹம்மத் இப்னு அப்துல் வஹாப் நஜ்தி போன்ற கொள்கை கெட்ட வஹாபிய அரசுகளால் நியமிக்கப்பட்ட இமாம்கள் ஆவர். கொள்கை கெட்டவர்களின் பின் தொடர்ந்து தொழுதால், தூயவர்களின் தொழுகையும் பாதிக்கப்படும்! என்பது **அஹ்லே சுன்னத் வல் ஜமாஅத்தின்** தீர்க்கமான கருத்தாகும்.

இன்னும் பலவாறு கூறி பாமர மக்களை, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹிவின் தொடர்பினிலிருந்து அறுத்து விட்டால், மீதியிருப்பவர்களையும் சுலபமாக வஹாபிகளாக மாற்றி விடலாம் என்பது இவர்களின் (வஹாபிகளின்) மற்றும் சாத்தானுடைய கூட்டுக் கனவாகும். இறைநேசர்கள் தான் (வலிமார்கள்)! அல்லாஹ்வின் பாதையில் வெற்றிப் பெற்றவர்கள்! அவர்கள் நடந்தேறிய பாதையிலேயே, நம்மையும் அல்லாஹ் வழி நடத்துவானாக! – ஆமின்.

## மஸ்லக்கே ஆலா ஹஜ்ரத்(Leader)

சைய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் இஸ்லாத்தின் சீரிய பணியாளராக இருந்ததனால் அல்லாஹ் மற்றும் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் வெகுமதியை பெற்றார்கள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி எந்த ஒரு சமயத்தையும் (மார்க்கத்தையும்) தன்னுடைய பெயரில் தோற்றுவித்ததில்லை. மாறாக இஸ்லாத்தின் ஈமானை (நம்பிக்கையை) உண்மையான வழியில் காட்டினார்கள். அதனாலயே ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை மஸ்லக்கே ஆலா ஹஜ்ரத் என்றும் மஸ்லக்கே அஹ்லே சுன்னத்வல் ஜமாஅத் என்றும் அழைக்கிறோம்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, அஹ்லே சுன்னத்வல் ஜமாத்தின் தீர்க்கமான கொள்கைகளை தமது கவிதையின் முலம் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமைப் பற்றி இவ்வாறு குறிப்பிடுகிறார்கள். (உருதுவில்)

**"அல்லாஹ் கி சர் த பாகதம் ஷான் ஹை ஏ.**
**இன்சா நஹி இன்சான், வோ இன்சான் ஹை ஏ.**
**குர்ஆன் தோ ஈமான் பதாதா ஹை இனேஹ்.**
**ஈமான் ஏ கஹதா ஹை, எ மேரி ஜான் ஹை ஏ."**

இதன் அர்த்தமாவது,

"தலை முதல் கால்ப்பாதம் வரை அல்லாஹ்வின் பெருமையை வெளிக்கொணருபவரே!

இவரைப் போன்று மனிதர் யாரும் கிடையாது! அவர் மனிதராக இருக்கிறார்!

குர்ஆன் இவர்கள் ஈமான் என காட்டுகிறது! ஆனால்! ஈமான் சொல்கிறது இவர்தான் (ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் தான்) என் உயிர்!"

இந்தக் கவிதை நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஹாஜிர், நாஜிர், எங்கும் இருக்கிறார், தம்முடைய ஞானக் கண்களால் நம் எல்லோரையும் பார்க்கிறார்கள், தொழுகையில் நம்மை பார்க்கிறார், அதனாலயே அத்தஹயாத்து இருப்பில் " ***யா அய்யுஹன் நபிய்யு வ ரஹமதுல்லாஹி பரகாதஹு***" என்று மரியாதையுடன் கூறும்போது நாயகம் நம்மை பார்க்கிறார்கள், நாம் பார்க்காவிட்டாலும் சரியே! போன்ற கொள்கைகளை எத்தி வைக்கின்றது.

ஹஜ்ரத் ஹஸ்ஸான் இப்னு சாபித் ரஜியல்லாஹு அன்ஹு என்ற சஹாபி (நபிநாயகத் தோழர்) சிறந்த கவிதையாளர் ஆவார். கவிதைகளை சொல்வதற்காக ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம், இவரை பள்ளிவாசல் மேடையில் (மிம்பரில்) கூட ஏற்றியிருக்கிறார்கள். இவருக்கு சுபச் செய்தியையும் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்

வழங்கியுள்ளார்கள். இந்த சஹாபி தன்னுடைய கவிதையில் நமது நாயகத்தை பின்வருமாறு போற்றுகிறார்கள். "கண்கள் உங்களை விட அற்புதம் ஒன்றை கண்டதாக சாட்சி கூறாது! எந்தப் பெண்மணியும் உங்களைப் போன்றதொரு அற்புதத்தை பெற்றெடுத்ததுமில்லை, இனிப் பெறப்போவதுமில்லை! நீங்கள் எல்லாவித பாவங்களிலிருந்தும் விடுபட்டவர்கள்! நீங்கள் விரும்பியவாறே உங்களை அல்லாஹ் படைத்தான்."

***ஆதாரம் - ரூஹுல் குதூஸ்***

தப்லீக் ஜமாத் தேவ்பந்தி வஹாபிகள், தௌஹீது வஹாபிகள், தடுமாற்ற வாதிகள், இஸ்லாமியா என்ற பெயரில் வலம் வரும் பொய்யர்கள், பகுதி16-சூரா அல்கா.்.ப் (110) வருகிற ஆயத்தின் படி

"நபியே சொல்லுங்கள், தோற்றத்தில் நானும் உங்களைப் போன்று மனிதன் தான். நான் வஹிகளை, உங்கள் அல்லாஹ்வாகிய ஒருவனிடமிருந்து பெறுபவனாக இருக்கின்றேன்." என்பதைக் எடுத்துக் கொண்டு நபியும் நம் போன்ற சாதரண மனிதர்தான் என தைரியமாக சொல்லிக்கொண்டு சுற்றித் திரிகின்றனர். மாஜ(z)ல்லா! அல்லாஹ் இவர்களை மன்னிக்கட்டும்! என்ன இவர்கள் எல்லாம் அல்லாஹ்வினுடைய வஹியை பெறுபவர்களா? என்ன தைரியம் இவர்களுக்கு? நபிக்கு நிகராக தம்மையும் பாவிக்கின்றனர் இந்த பொய்யர்கள்!

இந்த பொய்யர்கள் திருக்குர்ஆனுடைய ஒரு வசனத்தை எடுத்துக் கொண்டும், மற்றொரு வசனத்தை நிராகரித்தும் நடப்பவர்கள். ஆனால் உண்மையான அஹ்லே சுன்னத்வல் ஜமாஅத்தை சார்ந்த மூமின்கள் திருக்குர்ஆனுடைய எல்லா வசனங்களையும் முழுமையாக ஏற்று நடப்பவர்கள். அந்த மூமின்கள் அறிவார்கள் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமுடைய கண்கள் மற்ற எல்லாக் கண்களைக் காட்டிலும் வேறுபட்டது! அவருடைய காதுகள் மற்ற எல்லாக் காதுகளைக் காட்டிலும் வேறுபட்டது!

ஆம் அதனால்தான் நாயகமவர்கள் கூறுகிறார்கள் " என்னுடைய கண்கள் தூங்கினாலும் என்னுடைய இதயம் தூங்குவதில்லை" எனவே உலமா பெருமக்கள் கூறுகிறார்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மற்ற நபிமார்கள், மலக்குகளைக் காட்டிலும் எல்லாவற்றிலும் முதன்மையான படித்தரம் கொண்டவர். எனவே அவருடைய கண்கள் முழு உலகத்தையும் ஒரு பார்வையில் கிழக்கிலிருந்து மேற்காக அனைத்தையும் பார்க்கும் தன்மையுடையது. அவருடைய காதுகள் வானத்தில் விழும் சிறு கீறல்களையும் கேட்கும் தன்மையுடையது. அவருடைய மூக்கு ஹஜ்ரத் ஜிப்ரீல் அலைஹிஸலாம் அவர்களின் வருகையை வாசனையால் நுகரும் தன்மையுடையது.

மேலும் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் கூறுகிறார்கள், " நீங்கள் பார்க்க முடியாததையும் நான் பார்க்கின்றேன், நீங்கள் கேட்க முடியாததையும் நான் கேட்கின்றேன்." இப்படிப்பட்ட ஈமானைத்தான் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி நமக்கு அளித்தார்கள். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி நமக்கு சொல்லித் தந்ததெல்லாம் சஹாபாக்கள், தாபயீன்கள், தபே தாபயீன்கள், ஷுஹாதாக்கள், நாதாக்கள், அவ்லியாக்கள் (இறைநேசர்கள்) காட்டிச் சென்ற பாதையாகும்.

அஹ்லே சுன்னத்வல் ஜமாஅத்தை சார்ந்த முஸ்லிம்கள் வழிவழியாக சஹாபா பெருமக்கள் மீது வைத்திருக்கும் நம்பிக்கையையும், சஹாபா பெருமக்களை பின்பற்றி தொடர்ந்து வந்த இறைநேசர்கள் மீது வைத்திருக்கும் நம்பிக்கையையும், அஹ்லே பைத்துகள் ( ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமுடைய சந்ததிகள்) மீது வைத்திருக்கும் நம்பிக்கையையும் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தம்முடைய கவிதையில் பின்வருமாறு கூறுகிறார்கள்.

**" அஹ்லே சுன்னத் கா ஹை பேடா பார், அஸ் ஹபா ஹுஜுர்.**
**நஜ்ம் ஹை அவ்ர் நவ் ஹை, இத்ரத் ரசூல் அல்லாஹ் கி."**

<u>இதன் அர்த்தமாவது.</u>

அஹ்லே சுன்னத் வல் ஜமாஅத்தினுடைய கூட்டம் வெற்றியை பெறும் கூட்டம் ஏனென்றால் சஹாபா பெருமக்கள் நட்சத்திரங்களை போன்று வழி காட்டுகின்றனர், **அஹ்லே பைத்துகள்** (ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமுடைய சந்ததிகள்) நூஹ் அலைஹிசலாமுடைய கப்பலை போன்று (கு.ஃ.ப்ர் என்ற வெள்ளத்திலிருந்து) நம்மை கரைச் சேர்க்கின்றனர்.

இப்படிப்பட்ட, உண்மையான ஈமானை மக்களுக்கு எடுத்துக்காட்டி, வழிநடத்தி கொண்டிருக்கும் சைய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி 14ம் நூற்றாண்டின் முஜத்தித் (இஸ்லாத்திற்கு உயிரூட்டியவர்) என்றும், மஸ்லக்கே அஹ்லே சுன்னத்வல் ஜமாஅத் என்றும் அழைக்கப்படுகிறார்கள்.

ஷைத்தான் கூறியது போல் அல்லாஹ்விற்கு மட்டுமே மரியாதை நிமிர்த்தம், ஆதமுக்கு (அலைஹிஸலாம்) கிடையாது என்று கூறி கைச்சேதம் அடைந்தது போல், இன்று நம்மிடையில் வலம் வரும் ஆயிரக்கணக்கான பொய்யர்கள் (வஹாபிகள்) ''நாங்கள் எதுவாக இருந்தாலும் அல்லாஹ்விடமே நேரடியாக'' என்று கூறி தங்கள் இபாதத்துகள் மீது கர்வம் கொண்டு மற்ற இறைநேசர்களையும், பெரியார்களையும் ஏளனப்படுத்தும் சாத்தான்களிடமிருந்து விடுபட்டு. சைய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி நடந்தேறிய வெற்றிப் பாதையில், அவர்களின் வழித்தடத்தை பின் தொடர்வோமானால் இன்ஷா அல்லாஹ்! நிச்சயமாக, அல்லாஹ் மற்றும் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமின் வெகுமதியை பெற்றவர்களின் கூட்டத்தில் நாமும் சேர வாய்ப்புண்டு! ஆமின்!

நாரே தக்பீர்! நாரே ரிஸாலத்!
அல்லாஹு அக்பர்! யா ரசூலல்லா!

மஸ்லக்கே ஆலா ஹஜ்ரத்! ஜிந்தா பாத்!
யா கௌஸ்! அல்மதத்!

## எனது குருமாரின்(பீரோமுர்ஷித்) தந்தை ஓர் அறிமுகம்

ஹஜ்ரத் ஷேர்பீஷயே அஹ்லே சுன்னத், மஜ்ஹரே ஆலா ஹஜ்ரத் - ஹஜ்ரத் ஹஷ்மத் அலி கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தாருல் உலூம் ∴புர்கானிய்யா என்ற மதரஸாவில் தேவ்பந்த் (வஹாபியக்) கொள்கைகளை கொண்ட பாடத்திட்டங்களை படித்துப் பட்டம் பெற்றவர்.

சைய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் பெருமையைப் பற்றி அறிந்த ஹஜ்ரத் ஹஷ்மத் அலி கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஓர் எண்ணம் கொண்டார். அது என்னவெனில் ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி சார்ந்திருந்த அஹ்லே சுன்னத் வல் ஜமாஅத்தின் கொள்கைகளுக்கு எதிராக முனாஜிரா (வாக்குவிவாதம்) புரிந்து, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹியை வெற்றிக் கொள்ள வேண்டும் என்பதாகும்.

ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹியை முனாஜிராவில் சந்திப்பதற்காக ஹஜ்ரத் ஹஷ்மத் அலி கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி புறப்பட்டுக் கொண்டிருந்த நேரத்தில் வழியில் ஒரு பெரியார், ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி எழுதிய “ **தம்ஹீதே ஈமான்**” என்ற புத்தகத்தை வெயிலில் காய வைத்துக் கொண்டிருந்தார். இதைப் பார்த்த ஹஷ்மத் அலி கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, அப்பெரியாரிடமிருந்து அப்புத்தகத்தை வாங்கி, செல்லும் வழியில் படித்துக் கொண்டே சென்றார்.

புத்தகத்தை படிக்க படிக்க மனம் மாறியது! இப்போது உண்மையை அறிந்தவர்களாய்! தம் வஹாபியக் கொள்கைகளின் தவறை உணர்ந்தவர்களாய்! உள்ளம் திருந்தியவாறு ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை சந்தித்து மன்னிப்பு வேண்டி, ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹியின் முரீதானார்(சீடரானார்).

சையதினா ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹியின் ஆசிர்வாதத்தின் பொருட்டால் உண்மைக்கு எதிராக உள்ள கு..ப்ரைக் கொண்ட வஹாபியக் கொள்கைகளுக்கு எதிராக தம் பிரச்சாரத்தை தொடங்கினார். சில சமயங்களில் எதிரிகளின் (வஹாபிகளின்) தாக்குதலுக்கும் ஆளானார். ஹஜ்ரத் ஹஷ்மத் அலி கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் அஞ்சா நெஞ்சத்தையும், எதிரிகளுக்கு எதிராக தம் கூரிய வாள் போன்ற சொற்களால் வஹாபியக் கொள்கைகளை சிதறடிப்பதையும் கண்ட ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி, ஹஷ்மத் அலி கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களைப் பார்த்து "நீ என்னுடைய புலி மற்றும் என்னுடைய ரூஹானி (ஆன்மாவின்) மகன்" என்றார்கள்.

வஹாபியக் கொள்கைகளை விடுத்து மக்கள் அஹ்லே சுன்னத் வல் ஜமாஅத்தில் நிலைத்து நிற்பதைக் கண்ட விஷமிகள், ஹஜ்ரத் ஹஷ்மத் அலி கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி சொற்பொழிவாற்றும் போது கற்களை கொண்டு வீசி ஹஜ்ரத் அவர்களுக்கு இரத்தம் வருமாறு தொந்தரவு கொடுத்தனர். எனினும் எதைப் பற்றியும் கவலைப்படாமல், இறப்பிற்கும் அஞ்சாமல் உண்மையை நிலைநாட்டுவதையே குறிக்கோளாக கொண்டு பயணம் பல செய்து பல ஊர்களுக்கு சென்று சொற்பொழிவாற்றுவார்.

**"சுன்லே அது மை பிகட்னே வாலா நஹி**
**வோ சலாமத் ஹை முஜே பனானே வாலா!"**

ஹஜ்ரத் ஹஷ்மத் அலி கான் ரஹ்மத்துல்லாஹி அவர்கள் பெரியோர்களை கண்ணியப்படுத்துவதை மிக்க மகிழ்ச்சியாக கருதி செயலாற்றுவார். ஆலா ஹஜ்ரத் ரஹ்மத்துல்லாஹி அலைஹியின் மகனான ஹு"ஜு"ர் மு..ப்தி ஆசம் ஹிந்த் அலைஹி ரஹமது ரிஸ்வான் அவர்களைக் காணச் செல்லும் போதெல்லாம், அவரது கால்ப்பாதங்களை தம் உதடுகளால் முத்தமிடுவார்கள்.

(குறிப்பு :- ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு" அலைஹிவஸல்லமை நோக்கி கியாமத் நாள் பற்றியும் மறுமையை

பற்றியும் சொல்லுங்கள் என சஹாபாக்கள் கேட்டுக் கொள்ள, ரசூலல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் மறுமையைப் பற்றியும், கியாமத் நாள் பற்றியும் கூறிக் கொண்டிருந்தார்கள். சஹாபாக்கள் மற்றும் கூடியிருந்த பலர், ஒவ்வொருவரும் தங்களைப் பற்றி அந்நாளில் சொல்லுங்கள் என ஆர்வமுடன் கேட்க, ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் மிக்க உயரிய நிலையில் சென்றவாறு மறுமையின் இரகசியங்களை வெளியிட்டு கொண்டிருந்தார்கள். ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமை சாந்தப்படுத்துவதற்காக உமர்பா.்.ரூக் ரஜியல்லாஹு அன்ஹு, ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமின் கால்ப்பாதங்களை தம் உதடுகளால் முத்தமிட்டு சாந்தமடையச் செய்தார்கள்.)

ரசோலி மாவட்டத்திலுள்ள பராபன்கி என்ற இடத்தில் தேவ்பந்த் வஹாபிகளுடன் நடைப்பெற்ற விவாதத்தில் ஹஜ்ரத் ஹஷ்மத் அலி கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் வஹாபிகளை தலைக்குனிய வைத்தார். இதனால் ஆத்திரமடைந்த வஹாபிகள் தங்களுடைய வழக்கமான சூழ்ச்சி, தீவிரவாத அறிவைக் கொண்டு, ஹஜ்ரத் ஹஷ்மத் அலி கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் சாப்பிடும் வெற்றிலையில் விஷத்தை கலந்துவிட்டனர். ஹஜ்ரத் அந்த வெற்றிலையை மென்று சாப்பிடும் போது, தமது நுண்ணிய சுவை உணர்வினால் அறிந்து கொண்டு வெற்றிலையை உடனேயே துப்பிவிட்டார்கள். இருப்பினும் விஷத்தின் தீவிரத்தால், ஹஜ்ரத் ஹஷ்மத் அலி கான் ரஹமதுல்லாஹி அலைஹி ஹிஜ்ரி 1380-முஹர்ரம் 8ல்(3rd July 1960) முற்பகல் 10.03க்கு ஷஹீதானார்கள். ( இறை வழியில் நிலைத்து நின்றதனால் வஹாபிகளால் கொல்லப்பட்டார்கள்)

ஹஜ்ரத் ஹஷ்மத் அலி கான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் மசா(z)ர் ஷரீ.்.ப் உத்திரப்பிரதேசத்திலுள்ள பிலிபிட் ஷரீ.்.ப்பில் உள்ளது. ஹஜ்ரத் அவர்களின் முரீதுகளும், மற்ற மக்களும் ஹஜ்ரத்தின் கராமத்துகளால், இன்றும் பலன் பெற்று நேர்வழியில் செல்கின்றனர். ஹஜ்ரத் அவர்களின் மற்ற புதல்வர்களும் எனது பீரும் முர்ஷிதுமான முஹம்மத் இத்ரீஸ் ரஜா கான் கிப்லா அவர்களும் தமது தந்தையின் வழித்தடத்தை பின்பற்றி

அஹ்லே சுன்னத்வல் ஜமாஅத்தின் மக்களை வஹாபிகளின் கொள்ளையிலிருந்து ( சமானின் திருடர்கள்) காப்பாற்றுவதற்காக அரும்பாடுபட்டு வருகின்றனர். அல்லாஹு'தஆலா சில்சிலாயே அல்காதிரியுல் ரஜ்வியில் ஹஷ்மதியைக் கொண்டு, மேலும் நற்காரியங்களை செய்வதற்கு அருள்பாலிப்பானாக! மேலும் எங்களுக்கு(**அஹ்லே சுன்னத்வல் ஜமாஅத்**) சய்யதினா ஆலா ஹஜ்ரத் ரஹமதுல்லாஹி அலைஹி அவர்களின் வஸீலாவைக் கொண்டு வெற்றியை அளிப்பானாக!

ஆமின்.

யா **கௌஸ் அல்மதத்!**

# சலாம் (உருது & தமிழ் அர்த்தம்)

1. முஸ்த.ஃ.பா ஜானே ரஹமத் பே லாகோ சலாம்
ஷம்மே பஸ்மே ஹிதாயத் பே லாகோ சலாம்

(ரஹமத்தின் உயிரான முஸ்த.ஃ.பா (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) மீது லட்சாதிலட்சங்கள் சலாம்.
மக்கள் கூட்டம் நேர்வழி நடக்க விளக்கு போல் பேரொளி பிரகாசம் வீசுபவர் மீது லட்சாதிலட்சங்கள் சலாம்.)

2. ஜிஸ் சுஹானி கஹ்டி சம்கா தைபா கா சாந்த்
உஸ் தில் அஃ.ப்ரோஸ் சாஆதத் பே லாகோ சலாம்

(புனித நகரின் பரிசுத்த முழுநிலவு மின்னிய அந்த பொன்னான நேரம்,
அந்த அகங்குளிர்ச்சி கொண்ட நொடியின் மீது லட்சாதிலட்சங்கள் சலாம்.)

3. ஜின் கே சஜ்தே கு மெஹராபே காபா ஜுகி
உன் பஹோான் கி லதா.ஃ.பத் பே லாகோ சலாம்

(யாருடைய சஜ்தாவிற்கு பெருமைமிக்க காபதுல்லாவும் குனிந்ததோ,
அவருடைய மெல்லிய புருவங்கள் மீது
லட்சாதிலட்சங்கள் சலாம்.)

4. ஜின் கே மாத்தே ஷபாஅத் கா சஹரா ரஹா
உஸ் ஜபீனே சாஆதத் பர் லாகோ சலாம்

(யாருடைய தலையில் மறுமை நாளின் சிபாரிசு சஹராவாக (மாப்பிள்ளையின் தலை தோரணம்) இருக்கிறதோ,
அவருடைய பெருமைமிக்க நெற்றியின் மீது
லட்சாதிலட்சங்கள் சலாம்)

**5.** ஜிஸ் தர.ஃ.ப் உட் கயி தம்மே தம் ஆகயா
உஸ் நிகாஹ்யே ஹினாயத் பே லாகோ சலாம்

(எப்பக்கம் திரும்பினாலும் உயிரில் உயிர் வந்தது,
அந்த உயிர் கொடுக்கும் பார்வையின் மீது
லட்சாதிலட்சங்கள் சலாம்.)

**6.** தூரோ நஜ்திக் கே சுன்னே வாலே வோ கான்
கானே லாலே கராமத் பர் லாகோ சலாம்

(தூரத்திலும் அருகிலும் கேட்கும் திறன் பெற்ற அந்த காதுகள்,
கராமத் (அற்புதம்) கொண்ட அந்த பவள காதுகள் மீது
லட்சாதிலட்சங்கள் சலாம்.)

**7.** பத்லி பத்லி குலே குத்ஸ்கி பத்தியா
உன் லபோன் கி நஜா.ஃ.கத் பே லாகோ சலாம்

(மெலிதிலும் மெலிதான ஜன்னத்தின் ரோஜா இதழை ஒத்த,
அவருடைய உதடுகளின் மெல்லியத்தன்மையின் மீது
லட்சாதிலட்சங்கள் சலாம்.)

**8.** நூர் கே சஷ்மே லஹ்றாயே தர்யா பஹே
உங்ளியோ கி கராமத் பே லாகோ சலாம்

( பேரொளி ஊற்றிலிருந்து பீய்த்துக்கொண்டு வரும் நதியின் வெள்ளம்,
கராமத் (அற்புதம்) கொண்ட அந்த விரல்களின் மீது
லட்சாதிலட்சங்கள் சலாம்)

**9.** ஹாத் ஜிஸ் ஸிம்ட் உட்டாஹ் கனி கர்திய்யா
பஹரே மவ்ஜே ஸகாவத் பே லாகோ சலாம்

(யார் மீது கையை உயர்த்தினார்களோ அவர்களெல்லாம் மேன்மையாகி விட்டனர்,

கடலின் அலையைப் போல் மீண்டும் மீண்டும்
அளிக்கும் உயரிய தானத்தின் மீது லட்சாதிலட்சங்கள்
சலாம்)

**10.** குல் ஜஹான் மில்க் அவ்ர் ஜௌ கி ரோடீ கிஸா(z)
உஸ் ஷிகம் கி கினாஅத் பே லாகோ சலாம்

(ஈருலகத்தின் முதலாளியாக இருப்பினும் ஜௌவினுடைய (கோதுமை மாவின் கடைசி மட்ட மாவு) ரொட்டியை உண்பவர்,

அதை ஏற்றுக் கொள்ளும் வயிற்றின் பொறுமையின் மீது
லட்சாதிலட்சங்கள் சலாம்)

**11.** பூக்கே குத் ரஹ் கே கானா தியா கைர் கு
ஃபாத்திமா கி ஸகாவத் பே லாகோ சலாம்

(தாம் பசியாக இருந்து அடுத்தவருக்கு உணவளிக்கும்,
ஃபாத்திமாவின் கொடையின் மீது லட்சாதிலட்சங்கள்
சலாம்.)

**12.** கித்னே மஹக் கே படே ஹைன் மதீனே கே ஃபூல்
கர்பலா தேரி கிஸ்மத் பே லாகோ சலாம்

(மதீனாவின் தெரித்துத் சிதறிய பூக்கள் மலர்ந்து மணம் வீசுகிறது,

கர்பலா உந்தன் விதியின் மீது லட்சாதிலட்சங்கள் சலாம்.)

**13.** கௌஸ், காஜா, ரஜா, ஹாமிதோ, முஸ்தபா,
பன்ஞ் கன்ஞ்சே விலாயத் பே லாகோ சலாம்

(கௌஸ், காஜா, ரஜா, ஹாமிதோ, முஸ்தஃபா,

ஐவரின் விலாயத் (இறைநேசத்தன்மை) மீது
லட்சாதிலட்சங்கள் சலாம்)

**14.** ஏக் மேரா ஹி ரஹமத் பே தாவா நஹி
ஷா ஹகி சாரி உம்மத் பே லாகோ சலாம்

(எனக்கு மட்டும் ரஹமத்தை பெற்றுக்கொள்வதில் எண்ணமில்லை,
**மன்னர் முஹம்மதின்** (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) எல்லா உம்மத்தின் மீது லட்சாதிலட்சங்கள் சலாம்.)

**15.** முஜ்ஸே கித்மத் கே குத்தூஸி கஹே ஹா ரஜா
முஸ்த.·.பா ஜானே ரஹமத் பே லாகோ சலாம்.

(எனக்கு பணிவிடை செய்யும் வானவர்கள் என்ன ரஜா கூறினீர்கள் என்றால்,
ரஹ்மத்தின் உயிரான முஸ்த.·.பா (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) மீது லட்சாதிலட்சங்கள் சலாம் என்பேன்.)

**16.** தால் தி கல்ப் மே அஸ்(z)மதே முஸ்த.·.பா
சையதீ ஆலா ஹஜ்ரத் பே லாகோ சலாம்.

((முஸ்த.·.பாவின் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) பெருமைமிக்க நினைவை இதயத்தில் இட்ட,
தலைவர் ஆலா ஹஜ்ரத் (ரஹமதுல்லாஹி அலைஹி) மீது லட்சாதிலட்சங்கள் சலாம்.)

## Salaam

1. Mustafa jane rahmath pay lakhon salaam
   Sham e bazz may hidaayath pay lakhon
   salaam.

2. Jis suhaani gahdi cham ka thaiba ka chand
   Us dil afroz sa a dath pay lakhon
   salaam

3. Jin ka sajde ku mehraaba kaba juki
   Un bahon ki lathaafath pay lakhon
   salaam

4. Jin ka maatha shafa ath ka sahara rahaa
   Us jabeena sa dath pay lakhon salaam

5. Jis taraf ut gayi tham may tham aa gayaa
   Us nigaa ye hinaayath pay lakhon salaam

6. Dhoor nazdik kay sunna vala 'o' kaan
   Kaana laalay karaamath par lakhon
   salaam

7. Pathli pathli gulay quds ki pathiyaan
   Un labon ki nazaakath pay lakhon salaam

8. Noor ka chasmay laharaaya daryaa bahay
   Ungliyon ki karaamath pay lakhon salaam

9. Haath jis simt uttaah gani kar diyaa
   Bahara mavjay sakaavath pay lakhon
   salaam

10. Kul jahan ki milk aur 'jaw' ki roti kiza
Us shikam ki kanaa ath pay lakhon salaam

11. Buukay qudh rahkay khanaa diya gair ku
Fathima ki sakaavath pay lakhon salaam

12. Kithna mahak ka padain hain madinay kay phool
Karbala teri kismath pay lakhon salaam

13. Gouse, kaja, raza, haamido, mustafa
Panja kanja vilaayath pay lakhon salaam

14. Ek mera hi rahamath pay dawaa nahi
Shaa hakhi saari ummath pay lakhon salaam

15. Mujse kidhmath ka qudhisi kahe haan raza
Mustafa jane rahamath pay lakhon salaam

16. Dall di qalb may azmathay mustafa
Sayyadi aala hazrath pay lakhon salaam.

